தாதா பகவானால் நெறிப்படுத்தப்பட்ட

# அட்ஜெஸ்ட் எவ்ரிவேர்

ஒவ்வொருவருடனும் அனுசரித்துச் செல்வதே மிக உயர்ந்த தர்மம்

Tamil

# த்ரிமந்திரம்

(வாழ்க்கையில் ஏற்படும் தடைகளை, தகர்க்கும் த்ரி மந்திரங்கள்)

**நமோ வீதராகாய**

விருப்பு, வெறுப்புக்களுக்கு அப்பாற்பட்டவரை நான் வணங்குகிறேன்

**நமோ அரிஹந்தானம்**

அகப்பகைவர்களான கோபம், ஆணவம், ஏமாற்று, பேராசை ஆகியவற்றை அழித்து உயிர்ப்புடன் இருப்பவரை நான் வணங்குகிறேன்

**நமோ சித்தானம்**

பூரணமான மோட்சம் என்ற சித்த கதி அடைந்தவர்களை நான் வணங்குகிறேன்

**நமோ ஆயரியானம்**

பரமாத்ம அனுபவம் பெற்று மற்றவர்களுக்கும் ஆத்மஞானம் பெற செய்கிற ஆத்ம விஞ்ஞானிகளை நான் வணங்குகிறேன்

**நமோ உவஜ்ஜாயானம்**

பரமாத்ம அனுபவம் பெற தானும் கற்று கொண்டு மற்றவர்களுக்கும் கற்பித்து கொண்டிருக்கும் ஆத்ம ஞானிகளை நான் வணங்குகிறேன்

**நமோ லோயே சவ்வ சாஹுனம்**

உலககெங்கும் இருக்கும் ஆத்ம ஞானம் பெற்ற புனிதர்களை நான் வணங்குகிறேன்

**ஏசோ பஞ்ச நமுக்காரோ**

இந்த ஐந்து வணக்கங்கள்

**சவ்வ பாவப்பனாசணோ**

அனைத்து பாவ கர்மங்களை அழித்துவிடும்

**மங்களானம் ச சவ்வேசிம்**

அனைத்து மங்களங்களிலேயும்

**பதமம் ஹவயி மங்களம்**

இது தான் மிக உயரியது

**ஓம் நமோ பகவதே வாசுதேவாய**

மனித உருவில் முழுமையான ஆத்ம நிலை அடைந்தவரை நான் வணங்குகிறேன்

**ஓம் நம சிவாய**

உலக நலனுக்கு உறுதுணையாக இருந்த அனைத்து மனிதர்களையும் நான் வணங்குகிறேன்

**ஜெய் சச்சிதானந்தம்**

அழிவற்றிருக்கும் பரம்பொருளை அறிவதே பேரானந்தம்

## "ஞானி புருஷ்" குறித்த முகவுரை

1958-ம் ஆண்டு ஜூன் மாதம் மாலை பொழுது சுமார் ஆறு மணி அளவில் அம்பாலால் மூல்ஜி பாய் படேல் என்னும் ஒரு குடும்பஸ்தர், கட்டுமான ஒப்பந்ததாரர். இவர் சூரத் நகர் ரயில் நிலையத்தில் பரபரப்பாக இருந்த நடைமேடை மூன்றில் ஒரு அமர் பலகை மீது அமர்ந்திருந்தார். சூரத் இந்தியாவின் மேற்குப் பகுதி மாநிலமான குஜராத்தின் தெற்கு பகுதியில் உள்ள நகரமாகும். அங்கே அடுத்த நாற்பத்தி எட்டு நிமிடங்களில் நிகழ்ந்த ஒன்று மிக குறிப்பிட தக்கதாகும். அப்போதுதான் அம்பாலால் எம்.படேலினுள் ஆன்ம முற்றறிவு சட்டென்று ஒரு கணத்தில் நிகழ்ந்தது. இந்த நிகழ்வின் போது அக்கணத்தில் இருந்து அவரது தன்முனைப்பு முற்றிலுமாக உருகி மறைந்து போயின. அவர் முற்றிலுமாக அம்பாலால் எனும் தன்னிலை எண்ணங்களிலிருந்தும், பேச்சிலிருந்தும், செயல்களிலிருந்தும் விடுபட்டவராக ஆனார். அவர் மானுட இனத்தின் துயர் தீர்விற்கு நல்லறிவின் வழியான இறைவனது ஒரு உயிர்வாழ் கருவியாக ஆனார். அவர் இறைவனை, தாதா பகவான் என அழைத்தார். தான் சந்திக்கின்ற ஒவ்வொருவரிடமும், இந்த பிரபு, தாதா பகவான் என்னுள் முழுவதுமாக உருக்கொண்டுள்ளார். அவர் அனைத்து உயிர் வாழ் உயிரினங்களிலும் கூட வாழ்கிறார். ஒரு வேறுபாடு யாதெனில் அவர் என்னுள் முற்றிலுமாக வெளிப்பாடு கொண்டுள்ளார். உங்களில் அவர் இனிமேல்தான் உருக்கொள்ள இருக்கிறார்.

நாம் யார்? கடவுள் யார்? இந்த உலகினை நடத்துவது யார்? வினை என்பது என்ன? ஆன்ம விடுதலை என்றால் என்ன? இப்படியான உலகின் ஆன்மீக கேள்விகள் அனைத்திற்கும் நிகழ்வில் தான் பதிலளிக்கப்பட்டன. இவ்விதமாக இயற்கை அம்பாலால் மூல்ஜிபாய் பட்டேலின் மூலமாக உலகிற்கு பரம தரிசனம் அளித்தது.

அம்பாலால், குஜராத்தின் பரோடா நகரின் ஒரு துணை பகுதியான தார்ஷாலியில் பிறந்து பாதரண் கிராமத்தில் வளர்ந்தார். அவரது மனைவியின் பெயர் ஹீராபா. தொழிலளவில் அவர் ஒப்பந்த தொழிலராக இருந்தாலும், இல்லத்தில் அவரது வாழ்க்கை மற்றும் அவரை சுற்றி இருந்த ஒவ்வொருவரிடமும் அவர் கொண்டிருந்த பழக்கம், அவர் ஆன்ம முற்றறிவினை அடைவதற்கு முன்பே மிகவும் சிறந்து விளங்குவதாக இருந்தது. ஆன்ம முற்றறிவினராகவும் மற்றும் ஞானியின் நிலையை அடைந்தவராகவும் ஆன பிறகு(ஞான ஒளி பெற்றவர்) அவரது உடல் ஒரு பொதுநிலை அறவியல் காப்பமைப்பாக ஆனது.

அவரது வாழ்நாள் முழுவதிலும் ஒரு அடிப்படை கொள்கையாக, தர்மத்தில் வணிகம் இருக்கக்கூடாது, ஆனால் வணிகம் அனைத்திலும் தர்மம் இருந்தே ஆகவேண்டும் என்பதற்கேற்ப வாழ்ந்தார். அவர் தனது சொந்த பயன்பாட்டிற்காக எவரிடம் இருந்தும் பணத்தை பெற்றதில்லை. அவர் தனது வணிகத்தொழிலில் கிடைத்த லாபங்களை, தனது அடியார்களை இந்தியாவின் பல்வேறு பகுதிகளுக்கும் புனிதப் பயணம் மேற்கொள்வதற்கு பயன்படுத்தினார்.

அவரது வார்த்தைகள் அக்ரம் விஞ்ஞானம் எனப்படுகின்ற ஆன்ம முற்றறிவிற்கு புதிய, நேரடியான மற்றும் படிகளற்ற பாதைக்கான அடித்தளமாக ஆயின. அவரது தெய்வீக மூலமான விஞ்ஞான பரிசோதனை(ஞானவிதி) வழியாக, அவர் இந்த நல்லறிவினை மற்றவர்களுக்கு இரண்டே மணி நேரத்தில் உள்ளேற்றினார். ஆயிரக்கணக்கானோர் இப்போதும் கூட, இந்த செயல்முறையின் வழி அவரது அருள் கருணையை பெற்றுள்ளனர். "அக்ரம்" என்றால் படிகளற்றது என பொருள், அதாவது ஒரு விசைத்தூக்கி அல்லது ஒரு சுருக்க வழி என்பதாகும். இப்போது அக்ரம் தான் ஆன்ம பேரானந்தப் பரவசத்திற்கான ஒரு நேரடியான சுருக்கவழியாக கண்டறியப்பட்டுள்ளது.

## தாதா பகவான் யார்?

"தாதா பகவான்" யார் என்பதனை மற்றவர்களுக்கு விளக்கும் பொழுது அவர்,

இங்கே நீங்கள் காண்பது “தாதா பகவான்" அல்ல, நீங்கள் காண்பது "ஏ.எம்.பட்டேல்". நான் ஞானி புருஷ், என்னுள் உருக்கொண்டுள்ளவர் தான் "தாதா பகவான்" ஆவார். அவரே உள்ளுறைகின்ற பிரபு ஆவார். அவர் உங்களுக்குள் இன்னும் உருக்கொள்ளவில்லை. ஆனால் அதே நேரம் அவர் என்னுள் முழுவதுமாக உருக்கொண்டுள்ளார். நான் ஒரு பகவான் அல்ல. நானும் என்னுள் இருக்கின்ற தாதா பகவானை வணங்குகிறேன்.

## ஆத்ம ஞானத்திற்கான தற்கால இணைப்பு

நான் சில மக்களுக்கு சித்திகளை (சிறப்பான ஆன்மிக வல்லமைகள்) தனிப்பட்ட முறையில் உள்ளேற்றப் போகிறேன். நான் மறைந்த பிறகு, அவைகளுக்கான ஒரு தேவை இருக்காதா? வருங்கால தலைமுறை மக்களுக்கு இந்த பாதை தேவைப்படும், இல்லையா?

- **தாதாஸ்ரீ**

பரம பூஜ்ய தாதாஸ்ரீ தன்னை காண வருகின்ற அனைவருக்கும் ஒத்திசைவான உலகியல் தொடர்புகளுக்கான நல்லறிவினையும், அதுபோலவே ஆன்மா பற்றிய நல்லறிவினையும் உள்ளேற்றவும், சத்சங்கங்கள் அளிக்கவும் நகரம்-நகரமாக, நாடு-நாடாக போவது வழக்கமானது. அவருடைய அந்திம நாட்களில் அதாவது 1987-ம் ஆண்டின் பிற்பகுதியில் அவர், தனது பணியைத் தொடர்ந்து ஆற்றுவதற்காக தனது சித்திகளை டாக்டர் நிருபென் அமினுக்கு அருளினார்.

பரம பூஜ்ய தாதாஸ்ரீ 1988-ம் ஆண்டு ஜனவரி 2-ம் நாள் தனது உடலை விட்டு நீங்கிய பிறகு, டாக்டர் நிருபென் அவரது

பணியினைத் தொடர்ந்து ஆற்றினார். அதற்காக அவர் இந்தியாவினுள் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் பயணங்கள் மேற்கொண்டதுடன் உலகின் கண்டங்கள் அனைத்திற்கும் வருகை தந்து வெளிநாட்டுப் பயணங்களையும் மேற்கொண்டார். அவர் 2006-ம் ஆண்டு மார்ச் 19 வரை அக்ரம் விஞ்ஞானத்தினுடைய தாதாஸ்ரீயின் பிரதிநிதியாக தொண்டாற்றினார். அவர் தனது பணிக்காக தான் ஆற்றிய பொறுப்பினை ஸ்ரீ தீபக்பாய் தேஷாயிடம் ஒப்படைத்துவிட்டு, தனது பூத உடலினை விட்டுச்சென்றார். நவீன காலத்திற்கான ஆன்ம முற்றறிவிற்கு உரிய எளிமையான நேரடியான பாதையான அக்ரம் விஞ்ஞானத்தின் ஆதாரச் செயல் உருவினை உருவாக்குவதில் அவர் கருவியாக செயலாற்றினார். நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள் இந்த வாய்ப்பின் சாதகத்தை பற்றிக்கொண்டு தங்களது உலகியலான கடமைகளை நிறைவேற்றும் பொழுது தூய ஆன்மாவின் அனுபவத்தினில் நிலை நின்றவர்கள் ஆகிறார்கள். அவர்கள் சுதந்திரத்தினை தங்களது அன்றாட வாழ்க்கையை நடத்தும் பொழுது இங்கேயே இப்போதே அனுபவிக்கின்றனர்.

அக்ரம் விஞ்ஞான சத்சங்கத்தை நடத்துவதற்கான சித்தி வல்லமையை ஞானிபுருஷ் தாதாஸ்ரீ, ஸ்ரீதீபக்பாய் தேசாய்க்கு, பூஜ்ய நிருபென் அமினின் முன்னிலையில் தரப்பட்டது. 1988 மற்றும் 2006 ஆண்டுகளின் இடைப்பட்ட காலத்தில், அவர் தாதாஸ்ரீயின் கட்டளையின் படி டாக்டர் நிருபென் அமினின் வழிகாட்டுதலுக்கு இணங்க தேச அளவிலும் சர்வதேச அளவிலும் சத்சங்கத்தினை அளித்திருக்கிறார். இப்போது இந்த சத்சங்கங்களும் அக்ரம் விஞ்ஞான விதிகளும் ஆத்மஞானி ஸ்ரீதீபக்பாய் தேசாயின் வழியாக முழு தீவிரத்துடன் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.

சமய நூல்களில் உள்ள வலிமை வாய்ந்த சொற்கள், சாதகர்கள் தங்களது ஆன்மீக விடுதலை ஆசைக்குரிய பாதையை காட்டுவதாக உள்ளன. ஆன்மத்தை பற்றிய நல்லறிவு என்பதே சாதகர்கள் அனைவரது இறுதி இலக்காகும். இந்த

நல்லறிவு புத்தகங்களில் இல்லை. ஆன்மாவை பற்றிய நல்லறிவு இன்றி ஆன்ம விடுதலை என்பது இல்லை. அது ஒரு ஞானியின் இதயத்தில் உள்ளது. எனவே, ஆன்மாவைப் பற்றிய நல்லறிவு ஒரு ஞானியை சந்திப்பதனால்தான் அடைய முடியும். அக்ரம் விஞ்ஞானத்தினை விஞ்ஞான பூர்வமாக (வழி முறையாக) இன்றும் கூட ஒருவர் ஆத்மஞானத்தில் வாழ்கின்ற ஆன்மீக விஞ்ஞானியை சந்திப்பதால் அடைய முடியும்

## இந்த மொழிபெயர்ப்பு பற்றிய குறிப்பு

தாதாஸ்ரீ அல்லது தாதாஜி என அனைவராலும் அறியப்பட்டிருக்கும் ஞானி புருஷ்ஸ்ரீ அம்பாலால் எம்.படேல், தனது ஆன்ம முற்றறிவு பற்றிய விஞ்ஞானம் மற்றும் உலகியலான உள்தொடர்பு பற்றிய கலை ஆகியவற்றை மிகச்சரியான முறையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பது என்பது இயலாத ஒன்றாகும் என்று கூறுவது வழக்கம். சாதகருக்கு தெரிவிக்கப்படவேண்டிய பொருளின் சில ஆழத்தையும், திண்மையையும் இழந்ததாகத்தான் இருக்கும். எனவே, தனது உபதேசங்களை மிகத்துல்லியமாக புரிந்துகொள்வதற்கு குஜராத் மொழி கற்றுக்கொள்வதன் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தினார்.

என்றாலும் கூட, தாதாஸ்ரீ தனது மூலமான வார்த்தைகள் ஆங்கிலம் மற்றும் பிற மொழிகள் வழியாக உலகிற்கு கொண்டு சேர்ப்பதற்காக தனது ஆசிகளை அருளினார். உலகிலுள்ள துன்பப்பட்டுக் கொண்டிருக்கின்ற மாறுபட்ட உயிர்வாழிகள், தன்னுள் வெளிப்படுத்தப்பட்டு இருக்கின்ற மிக அற்புதமான அக்ரம் விஞ்ஞானத்தினது வாழ்வியலான சுதந்திரத்தை அடைய வேண்டும் என்பது அவரது ஆழ்ந்த ஆசையும் வேட்கையுமாக இருந்தது. இந்த விஞ்ஞானத்தின் செயல்முறையான வல்லமைகள் பற்றிய அனுபவ மகிழ்ச்சியை உலகம் பயபக்தியோடு ஏற்றுக்கொள்ளும் ஒரு நாள் நிச்சயம் வரும் என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

இது ஞானி புருஷரான தாதாஸ்ரீயின் உபதேசங்களின் சாராம்சத்தை உலகிற்கு வழங்குவதற்கான ஒரு பணிவான முயற்சியாகும். அவரது வார்த்தைகளின் அடிநாதமும், செய்தியும் அப்படியே காக்கப்பட்டதாக இருக்க மிகுந்த கவனம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த மொழிபெயர்ப்பு ஏதோ மொழியளவில் மட்டும் அவரது வார்த்தைகள் மாற்றித்தரப்பட்ட ஒன்றல்ல. இதனை உருவாக்கியதில் பல நபர்கள் மிக விழிப்புணர்வுடன் பணியாற்றியுள்ளனர். எனவே அவர்கள் அனைவருக்கும் ஆழ்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

அவரது உபதேசங்கள் எனும் பரந்துபட்ட புதிய கருவூலத்திற்கான ஒரு துவக்கநிலை முகமன் இது. இந்த மொழிபெயர்ப்பில் தவறுகள் எதுவும் காணப்படின், அவை இதன் மொழிபெயர்ப்பாளர்கள் உடையதே ஆகும் என்பதை கவனத்தில் கொள்க, அவர்களுக்காக நாங்கள் உங்களது மன்னிப்பை கோருகிறோம்.

## பதிப்பாளர் குறிப்பு

வாழ்க்கையின் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நாமே புரிதலோடு எதிராளியை அனுசரித்துப் போகவில்லை என்றால் பயங்கரமான மோதல் ஏற்படத்தான் செய்யும். வாழ்க்கை தீவிரமானதாக மாறி, இறுதியில் தானாகவே நாம் அனுசரித்துப் போகவேண்டிய கட்டாயத்தை உலகம் நமக்கு ஏற்படுத்தித் தந்து விடும். புரிந்துணர்வுடன் நாம் அனுசரித்து நடக்கும் பொழுது, மோதல் போக்கு தவிர்க்கப்பட்டு சுகமும்-அமைதியும் ஏற்படும்.

வாழ்க்கை என்பது அனுசரித்து நடக்க வேண்டிய ஒன்றே தவிர வேறு ஒன்றுமில்லை. பிறப்பு முதல் இறப்பு வரை அனுசரித்தே நடக்க வேண்டும். இதை சந்தோஷமாகச் செய்தாலும் சரி வருத்தத்தோடு செய்தாலும் சரி. படிப்பது பிடித்திருந்தாலும் பிடிக்கா விட்டாலும், அனுசரித்துப் படித்துதான் ஆக வேண்டும். கல்யாணம் செய்யும் சமயத்தில் அனைத்தும் சந்தோஷமாகவே இருக்கும். ஆனால் கல்யாணம்

ஆன பிறகு வாழ்க்கை முழுவதும் கணவன் மனைவிக்கு இடையே பரஸ்பர அனுசரித்தல் இருக்க வேண்டும். இரண்டு வேறுபட்ட இயல்புகள் கொண்டவர்கள் ஒன்றாக வசித்து, தங்கள் வாழ்க்கையை வாழ்ந்திடல் வேண்டும். இதில் ஒருவரோடு ஒருவர் பரஸ்பரம் ஒத்திசைவோடு அனுசரித்து நடக்க வேண்டும். இப்படிப்பட்ட புண்ணியம் செய்தவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் இந்தக் காலத்தில்? ஸ்ரீமான் இராமச்சந்திர மூர்த்திக்கும் சீதா பிராட்டிக்கும் இடையே கூட பல வேளைகளில் கருத்து வேறுபாடுகள் இருந்தன இல்லையா? பொன்மான், அக்னி பரீக்ஷை மகப்பேறு காலத்திலும் வனவாசம் நடந்தன இல்லையா? அவர்கள் எப்படியெல்லாம் அனுசரித்துப் புரிதலோடு நடந்திருப்பார்கள்?

தாய், தந்தை மற்றும் குழந்தைகளோடு ஒவ்வொரு நிலையிலும் அனுசரித்து நடக்க வேண்டியிருக்கிறது. புத்திசாலித்தனத்தோடு அனுசரித்து நடந்தீர்கள் என்று சொன்னால் அமைதி நிலவும், கர்மவினை உங்களைக் கட்டுப்படுத்தாது. குடும்பத்தில், நண்பர்களோடு, தொழிலில் மேலதிகாரியோடு, வியாபாரியோடு அல்லது தரகர்களோடு, மந்தநிலையில் அதன் போக்கோடு என அனைத்து இடங்களிலும் நாம் அனுசரித்துப் போகவில்லை என்றால் நம்மிடம் துக்கங்களின் பெருஞ்சுமைகள் வந்து சேர்ந்து விடும்.

ஆகையால் அனைத்து இடங்களிலும் அனுசரித்தல் என்பதில் தேர்ச்சி பெற்று வாழ்க்கை நடத்தும் பொழுது மனிதனின் வாழ்க்கையில் திறக்கப்படாத பூட்டுக்கள் என்று எதுவுமே இருக்காது. ஞானிபுருஷ் பரம பூஜ்ய தாதாஸ்ரீயின் பொன்னான வாக்கியமான “**அட்ஜஸ்ட் எவ்ரிவேர்**” அதாவது “**அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுதல்**” என்பதை உங்கள் வாழ்க்கையில் உள்வாங்கிக் கொண்டீர்கள் என்றால் உலகம் சுகமானதாக மாறி விடும்.

**ஜெய் சச்சிதானந்தம்**

**டாக்டர். நிருபென் அமின்**

# அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுதல்

## இந்த சொற்றொடரினை உள்வாங்கிக் கொள்ளுங்கள்

**கேள்வியாளர்:** இப்போது வாழ்க்கையில் அமைதி நிரம்பிய எளிய பாதை தேவையாக இருக்கிறது.

**தாதாஸ்ரீ:** ஒரே ஒரு சொற்றொடரினை உங்கள் வாழ்க்கையில் நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா? அதை சரியாகவும், ஒழுங்காகவும் எடுத்துக் கொள்வீர்களா?

**கேள்வியாளர்:** ஆம்.

**தாதாஸ்ரீ:** "**அட்ஜஸ்ட் எவ்ரிவேர்**" அதாவது அனைத்து இடங்களிலும் அனுசரித்து நடத்தல். இதை நீங்கள் உங்கள் வாழ்க்கையில் பழகத் தொடங்கி விட்டீர்கள் என்றால் பல விஷயங்கள் நிறைவேறிவிடும். உங்களுக்கு அமைதி தானாகவே கிடைத்துவிடும். தொடக்கத்தில் ஆறு மாதங்கள் வரை தடைகள் வரும், பின்னர் தானாகவே அமைதி நிலைநாட்டப்படும். முதல் ஆறு மாதங்கள் வரை முன்பு செய்தவற்றிற்கான எதிர்வினைகள் ஏற்படும். ஆகையால் அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுங்கள். பயங்கரமான இந்தக் கலியுக காலத்தில் நாம் அனுசரித்துச் செல்லவில்லையென்றால், நாம் முடிவுக்கு வந்து விடுவோம்.

உலகில் வேறு எதுவும் ஏற்படவில்லை என்றாலும் பரவாயில்லை. ஆனால் அனுசரித்துச் செல்லும் இயல்பு ஏற்பட்டே ஆக வேண்டும். எதிரில் இருப்பவர் அனுசரித்து நடக்காதவராகவே இருந்து விட்டுப் போகட்டும். ஆனால் நீங்கள்

அனுசரித்து நடந்து கொண்டே இருந்தால், இந்த வாழ்க்கை எனும் கடலினைக் கடந்து நீங்கள் கரை சேர்ந்து விடுவீர்கள். யாரால் மற்றவர்களை அனுசரித்து நடக்க முடிகிறதோ, அவரை எந்த துக்கமும் வந்து அடைவதில்லை. அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுங்கள். ஒவ்வொருவருடனும் அனுசரிக்கப் பழகி விடுதல் தான், மிகப்பெரிய தர்மம் ஆகும். இந்தக் காலத்தில் பலவகையான இயல்பு உடையவர்கள் இருக்கின்றார்கள். ஆகையால் அனுசரித்துப் போகாமல் இருந்தால் எப்படி நடக்க முடியும்?

## குறுக்கிட வேண்டாம், அனுசரித்துச் செல்லுங்கள்

மாறுவது தான் உலகின் இயல்பு ஆகையால், தொடர்ந்து மாற்றம் நடைபெற்று வருகிறது. ஆனால் மூத்த குடிமக்கள் பழங்காலத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறார்கள். உலகத்தோடு இசைவாகச் செல்லுங்கள், இல்லையென்றால் அடிபட்டு மடிய நேரிடும். உலக நியதிப்படி அனுசரித்துப் போக வேண்டும். நான் திருடர்களோடு, ஜேப்படித் திருடர்களோடு என அனைவரோடும் அனுசரித்துப் போகிறேன். நாம் திருடனோடு பேச்சுக் கொடுத்தால் அவனுக்கும் நம் மனதில் அவன் பொருட்டுக் கருணை இருக்கிறது என்று விளங்கும். நான் அவனிடத்தில், நீ செய்வது தவறு என்று கூறுவதில்லை. ஏனென்றால் அது அவனுடைய கண்ணோட்டம். ஆனால் பலர் அவன் பயனே இல்லாதவன் என்றெல்லாம் கூறி வசை பாடுகிறார்கள். அப்படிப் பார்த்தால் வக்கீல்கள் பொய்யர்கள் இல்லையா? உண்மையே இல்லாத ஒரு வழக்கை நான் ஜெயித்து விடுவேன் என்று கூறுபவர்கள் பொய்யர்கள் தானே, வேறு என்ன? கள்வனைக் கயவன் என்று கூறுவோம். ஆனால் மெய்யே இல்லாத வழக்கை மெய்யானது என்று ஆக்கும் அவர்களின் மீது எப்படி நம்பிக்கை கொள்வது? இருந்தாலும், அவர்கள் வியாபாரமும் நடக்கிறது இல்லையா? யாரையுமே நான் பொய்யர் என்று கூறுவதில்லை. அவரவர் தத்தமது

கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது சரி தான். ஆனால் களவு புரிவதனால் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பற்றி நான் அவர்களுக்குப் புரிய வைப்பேன்.

மூத்தவர்கள் வீட்டுக்கு உள்ளே வந்தவுடனேயே என்ன கூறுவார்கள் தெரியுமா? இது இரும்பு அலமாரியா? இது வானொலியா? இது ஏன் இப்படி இருக்கிறது? அது ஏன் அப்படி இருக்கிறது? என்றெல்லாம் ஏதாவது ஒன்றைப் பிடித்துக் கொண்டு பிரச்சனை வளர்ப்பதுண்டு. ஐயா, இளைஞர்களோடு நட்போடு பழகுங்கள். காலம் மாறிக் கொண்டே இருக்கும். பழையன கழிதலும்-புதியன புகுதலும் என்பது தானே உலக இயல்பு. புதியவை இல்லை என்றால் எப்படி வாழ்க்கை இயங்கும்? இப்படிப்பட்ட புதியன எண்ணற்ற முறை வந்திருக்கின்றன, சென்றிருக்கின்றன. இவை பற்றியெல்லாம் மோதல் போக்கை மேற்கொள்ளக் கூடாது. உங்களுக்கு சம்மதமில்லை என்றால், நீங்கள் அதைப் பின்பற்ற வேண்டாம். எந்த ஒரு ஐஸ்க்ரீமும் என்னிடமிருந்து விலகி இருங்கள் என்று நம்மிடம் கூறுவதில்லை. நீங்கள் உண்ண விரும்பவில்லை என்றால் உண்ணாதீர்கள். ஆனால் இந்தப் பெரியவர்கள் அதன் மீது தங்கள் எரிச்சலை வெளிப்படுத்தியவாறே இருப்பார்கள். இந்தக் கருத்து வேறுபாடுகள் எல்லாம் யுக மாற்றத்தினால் ஏற்படுபவை. குழந்தைகள் காலத்திற்கேற்ப நடந்து கொள்வார்கள். புதிது புதிதாக உற்பத்தி ஆகிக் கொண்டிருக்கும், காட்சியளிக்கும் பொருட்கள் மீது மோகம் ஏற்படும். என் சிறு வயது முதற்கொண்டே இந்த உலகம் சரியான திசையில் செல்கிறதா-இல்லையா என்று ஆழமாக ஆராய்ந்து வந்திருக்கிறேன். இந்த உலகத்தை மாற்றக்கூடிய வல்லமை யாரிடத்திலும் இல்லை என்பதை நான் புரிந்து கொண்டேன். ஆகையால் யாரானாலும் மாறும் காலத்திற்கேற்ப தங்களை சரியமைத்துக் கொள்ள வேண்டும். பையன் புதிய தொப்பி அணிந்து வந்தால், என்ன இப்படி ஒரு தொப்பியை போட்டுகொண்டு வந்திருக்கிறாயே என்று கேட்காதீர்கள். மாறாக, இத்தனை அழகான தொப்பி எப்படி உனக்கு கிடைத்தது

என்று உங்களை சரியமைத்துக் கேளுங்கள். இதுபோல அனுசரிக்கப் பழகுங்கள்.

அசௌகரியத்தில் சௌகரியத்தைக் காணுங்கள் என்றே நமது சமயம் கூறுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு நாளிரவில், படுக்கை விரிப்புகள் அழுக்காக இருப்பதாக நான் உணர்ந்தேன். நான் உடனே அவை மிக மிருதுவாக இருப்பதாக என் மனதை சரியமைத்துக் கொண்டேன். இதன் விளைவாக அவை எனக்கு மிக சௌகரியமாக இருந்தன. நமது ஐம்புலன்கள் வாயிலாக நமக்குக் கிடைக்கும் அறிவு தான் அசௌகரியத்தை நமக்குக் காட்டுகிறது. ஆனால் ஆன்மஞானம் சௌகரியத்தை உணரச் செய்கிறது. ஆகையால் ஆன்மாவிலேயே ஈடுபட்டு இருங்கள்.

## ஏற்று கொள்ளாத மக்களுடன் அனுசரித்தல்

சாக்கடையிலிருந்து துர்நாற்றமடித்தால் அதோடு சண்டையிடச் செல்வீர்களா என்ன? இதைப் போலவே மனிதர்களும் துர்நாற்றத்தைப் பரப்புகிறார்கள், அவர்களோடு சண்டைக்கா நிற்பீர்கள்? துர்நாற்றம் பரப்புபவர்கள் அனைவரையும் சாக்கடை என்று கூறுவோம். மணம் பரப்புபவர்களை நறுமலர்கள் என்போம். இரண்டையும் அனுசரித்துச் செல்ல வேண்டும். பற்றற்ற உணர்வில் அதாவது விருப்பு-வெறுப்பு இல்லாத நிலையில் இருக்க வேண்டும்.

நல்லவை-கெட்டவை என்ற கருத்துக்கள் காரணமாகவே நமக்குத் துயரம் ஏற்படுகிறது. நாம் இரண்டையுமே சமமானவையாக எடுத்துக்கொள்ள வேண்டும். ஒன்றை நாம் நல்லது எனும் போது மற்றது அதோடு ஒப்பிடுகையில் தீயதாகி விடுகிறது. அது நமக்கு பிரச்சனை தருவதாக அமைகிறது. இரண்டையும் நாம் இணைத்து பார்க்கத் தொடங்கினோம் என்றால், எந்த பாதிப்பும் நமக்கு ஏற்படாது. அனைத்து நிலைகளிலும் அனுசரித்துச் செல்ல வேண்டும் என்பதே என்

ஆலோசனை. உண்மை பேசுவோரிடத்திலும் சரி, பொய் பேசுவோரிடத்திலும் சரி அனுசரித்துச் செல்ல வேண்டும். யாராவது என்னிடத்தில் வந்து, உனக்கு அறிவே கிடையாது என்று கூறினால், அதையும் நான் அனுசரித்து விட்டு, எனக்குத் தான் அறிவு முன்பிருந்தே கிடையாதே, இல்லாத ஒன்றை ஏன் இன்று தேடி வந்திருக்கிறீர்கள். உங்களுக்கு இது இன்று தான் தெரியும். ஆனால் எனக்கு சிறுவயதிலிருந்தே தெரியும் என்பேன். இப்படிக் கூறினால் சங்கடம் விலகி விடும் இல்லையா? பிறகு அவர் நம்மிடம் நம் அறிவைத் தேடிக் கொண்டு வர மாட்டாரே! இப்படி நீங்கள் அனுசரித்துச் செல்லவில்லை என்றால் எப்படி நீங்கள் உங்கள் நிஜ இல்லமான மோக்ஷத்தைச் சென்று அடைவீர்கள்?

## மனைவியோடு அனுசரித்துச் செல்லுதல்

**கேள்வியாளர்**: அனுசரித்துப் போவதென்றால் எப்படி என்பதைத் தெளிவு படுத்த வேண்டும்.

**தாதாஸ்ரீ**: வேலையிலிருந்து வீட்டிற்கு வர தாமதமாகி, மனைவி கடிந்து கொண்டார் என்றால், இத்தனை தாமதமாக வருகிறீர்களே, இதெல்லாம் சரிப்படாது என்பன போன்ற சொற்களைப் பயன்படுத்தினால், நீங்கள் அப்போது என்ன சொல்ல வேண்டுமென்றால், ஆம், நீ கூறுவது சரிதான். நீ கூறினால் நான் திரும்பச் சென்று விடுகிறேன், அனுமதி அளித்தால் உள்ளே வருகிறேன் என்று கூறுங்கள். அப்போது அவர் இல்லையில்லை, நீங்கள் சென்று விடாதீர்கள். இங்கேயே அமைதியாகப் படுத்து உறங்குங்கள் என்பார். உடனே நீங்கள், நீ அனுமதித்தால் உண்கிறேன், இல்லையென்றால் அப்படியே உறங்கி விடுகிறேன் என்றீர்கள் என்றால், அவர், இல்லையில்லை உண்ணுங்கள் என்பார். அப்போது நீங்கள் அவர் கூறியபடி உண்ண வேண்டும். அதாவது, அனுசரித்துச் செல்லுங்கள். பிறகு காலையில் அவர் உங்களுக்கு

பிரமாதமான தேநீரை அளிப்பார்; மாறாக நீங்கள் மிரட்டினீர்கள் என்றால் முகத்தை கோபத்தோடு வைத்துக் கொண்டு தேநீரை அளிப்பார். மூன்று நாட்கள் வரை இந்தக் கோபம் மிகுந்த சூழல் தொடரும்.

## கிச்சடியா - பீட்ஸாவா எதை உண்பது?

அனுசரித்துச் செல்ல இயலவில்லை என்றால் என்ன செய்கிறோம், மனைவியோடு சண்டை தானே போடுகிறோம்.

**கேள்வியாளர்**: ஆம்

**தாதாஸ்ரீ**: அப்படியா? எதற்காக மனைவியோடு பிரச்சனை? அப்படி பிரச்சனையில் ஈடுபடுவதால் என்ன கிடைக்கப் போகிறது? உங்கள் மனைவிக்கு உள்ளபடியே உங்கள் சொத்தில் பங்கு இருக்கிறது.

**கேள்வியாளர்**: கணவனுக்கு குலாப் ஜாமுன் உண்ண வேண்டும் என்று தோன்றுகிறது, ஆனால் மனைவி கிச்சடி சமைத்தார் என்றால் சண்டை மூள்கிறது.

**தாதாஸ்ரீ**: சண்டை உருவான பிறகு மனைவி குலாப்ஜாமுன் செய்வாரா? இல்லையே! வேறு வழியில்லாமல் கிச்சடியைத் தானே உண்ண வேண்டியிருக்கிறது

**கேள்வியாளர்**: பிறகு ஹோட்டலில் இருந்து பீட்ஸா வரவைக்கப்படுகிறது.

**தாதாஸ்ரீ**: அப்படியா? அதாவது இதுவும் போயிற்று, அதுவும் போயிற்று. பீட்ஸா நுழைந்து விடுகிறது, சரியா? ஆனால் நமது குலாப்ஜாமுன் போயே போய்

விட்டது, இல்லையா? அதற்கு பதிலாக உங்கள் மனைவியிடம் நீங்கள் உனக்கு எது சரியென்று படுகிறதோ, அதையே செய் என்று கூறியிருந்தீர்கள் என்றால், அவருக்குமே கூட உங்களுக்கு விருப்பமானதைச் செய்து கொடுக்க வேண்டும் என்ற உணர்வு உண்டாகும் தானே! அதற்கு அவர் கூறுவார், இல்லை உங்களுக்கு விருப்பமானவற்றை நான் செய்கிறேன் என்பார். அப்போது நீங்கள் குலாப்ஜாமுன் செய்து கொடு என்று கூறுங்கள். ஆனால் முதலிலேயே நீங்கள் குலாப்ஜாமுன் செய்து கொடு என்று கூறியிருந்தால், அவர், இல்லை நான் கிச்சடி தான் செய்வேன் என்றிருப்பார்.

**கேள்வியாளர்**: இவை போன்ற கருத்து வேறுபாடுகளைப் போக்க நீங்கள் என்ன மாதிரியான வழி முறையைப் பரிந்துரை செய்கிறீர்கள்?

**தாதாஸ்ரீ**: நான் கூறும் வழிமுறை இது தான் - அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுங்கள், அட்ஜஸ்ட் செய்து கொள்ளுங்கள் என்பது தான். மனைவி கிச்சடி செய்ய வேண்டும் என்றால், நீங்கள் அதற்கு இசைந்து கொடுங்கள். அதே போல நீங்கள், நாம் வெளியே செல்லலாம், சத்சங்கம் செல்வோம் என்றால், அதற்கு அவர் இசைந்து கொடுக்க வேண்டும். அனுசரித்து நடக்க வேண்டும். முதலில் யார் கூறுகிறாரோ அவரோடு அனுசரித்து நடக்கப் பழகுங்கள்.

**கேள்வியாளர்**: அப்படியென்றால் முதலில் யார் பேசுவது என்பதில் பிரச்சனை ஏற்படுமே!

**தாதாஸ்ரீ**: ஆம், சரிதான். அப்படியென்றால் சண்டையிட்டுக் கொள்ளட்டும். அதையும் தாண்டி சண்டையிடுபவரோடு அனுசரித்துச் செல்லுங்கள். ஏனென்றால் உங்கள் கட்டுப்பாட்டில் எதுவும் கிடையாது. யார் கட்டுப்பாட்டில் அனைத்தும் இருக்கின்றன என்பதை நானறிவேன்.

அப்படியென்றால் அனுசரித்து நடப்பதில் உங்களுக்கு ஆட்சேபணை ஏதும் இருக்கிறதா சகோதரனே?

**கேள்வியாளர்:** இல்லை, கண்டிப்பாக இல்லை.

**தாதாஸ்ரீ:** சகோதரி, உங்களுக்கு ஆட்சேபணை ஏதும் உண்டா?

**கேள்வியாளர்:** இல்லை.

**தாதாஸ்ரீ:** அப்படியென்றால் உடன்பட்டுப் போக வேண்டியது தானே! அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுங்கள். இதில் என்ன ஆட்சேபணை இருக்கப் போகிறது?

**கேள்வியாளர்:** இல்லை கண்டிப்பாக கிடையாது.

**தாதாஸ்ரீ:** முதலில் அவர் உங்களிடம் வெங்காய பக்கோடா, லட்டு, காய் என அனைத்தையும் செய் என்று கூறியிருந்தால், அதற்கு நீங்கள் இசைவாக நடக்க வேண்டும். மாறாக இன்று களைப்பாக இருக்கிறது, சீக்கிரமாகத் தூங்க வேண்டும் என்று உங்கள் மனைவி கூறினால் அதற்கு நீங்கள் இசைவாக நடந்து கொள்ள வேண்டும். அப்போது நீங்கள் ஒரு நண்பரைப் பார்க்கச் செல்ல வேண்டியிருந்தாலும் கூட, நீங்கள் அவர் பேச்சுக்கு இடமளித்து சீக்கிரமாக உறங்கச் செல்ல வேண்டும். ஏனென்றால் நண்பரை பிறகு சமாளித்துக் கொள்ளலாம், ஆனால் இங்கே வீட்டில் அப்படிச் செய்ய முடியாது இல்லையா? நண்பரோடு உறவைப் பேண வீட்டில் பிரச்சனையை வளர்த்துக் கொள்கிறீர்கள், இப்படிச் செய்வது சரியல்ல. அதாவது அவர் முதலில் கூறினார் என்றால், அதற்கு ஏற்ப நீங்கள் இசைவாக நடக்கப் பழக வேண்டும்.

**கேள்வியாளர்:** ஆனால் எட்டு மணிக்கு ஒருவருடன் முக்கியமான சந்திப்புக்கு செல்ல வேண்டும், ஆனால் மனைவி,

நீங்கள் போகவேண்டாம் தூங்குங்கள் என்றால் அப்போது என்ன செய்யலாம்?

**தாதாஸ்ரீ:** இதுபோன்ற கற்பனைகளைச் செய்யாதீர்கள். இயற்கையின் விதி என்னவென்றால், “மனம் எங்கே இருக்கிறதோ, மார்க்கமும் அங்கே உண்டு” என்பது தான். அதீத கற்பனை, கோளாறில் தான் கொண்டு விடும். நீங்கள் கூறும் அந்த நாளிலே அவரே கூறுவார், நீங்கள் சீக்கிரமாகச் செல்லுங்கள் என்று உங்களை ஊக்கப்படுத்துவார். வீண் கற்பனையால் அனைத்தும் சிதைந்து போகும். ஆகையால் ஒரு புத்தகத்தில் என்ன எழுதியிருக்கிறது என்றால், “மனம் இருந்தால் மார்க்கம் உண்டு” என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதைப் பின்பற்றி நடந்தீர்கள் என்று சொன்னால், பலவற்றை சாதிக்க முடியும். பின்பற்றி நடப்பீர்கள் தானே?

**கேள்வியாளர்:** ஆம், கண்டிப்பாக.

**தாதாஸ்ரீ:** சரி, உறுதியளியுங்கள். அட, உறுதியளித்து விட்டீர்களே! உங்களைப் போன்றவர்களைத் தான் மனோதிடம் மிக்கவர்கள் என்பார்கள். வாழ்த்துக்கள்.

## உணவு வேளைகளில் அனுசரித்து நடத்தல்

நிறைவான வாழ்வு என்பது அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்வதையே சொல்கிறோம். இது மேம்பாடுகள் நிறைந்த உலகம். கருத்து வேறுபாடுகளைக் களைந்து முன்னேற வேண்டிய காலம். ஆகையால் மக்களுக்கு நான் அளிக்கும் முக்கியமான கருத்து என்னவென்றால், அனைத்திடங்களிலும் அனுசரித்து நடந்து கொள்ளுங்கள். அனுசரிப்பு, அனுசரிப்பு, அனுசரிப்பு. மோரிலே அதிக உப்பு இருக்கிறது என்று சொன்னால், தாதாவை நினைவில் கொள்ளுங்கள், அனுசரித்து நடப்பது பற்றி அவர் கூறியதை

நினைத்துப் பாருங்கள். யார் இந்த சம்சாரக் கடலிலிருந்து விடுதலை அடைய விரும்புகிறார்களோ, அவர்கள் அனுசரித்துச் செல்லத்தான் வேண்டியிருக்கும். கணவன்-மனைவி இருவரிடத்தில் யாராவது ஒருவர் பிரச்சனை உண்டாக்கினால், மற்றவர் இணைப்பாக இருக்க வேண்டும். அப்போது தான் உறவுகள் பலப்படும், அமைதி நிலவும். யாரால் அனுசரித்துச் செல்ல முடியவில்லையோ, அவர்களை மக்கள் மனநிலை சரியில்லாதவர் என்றே கூறுவார்கள். இந்த தற்கால உண்மையோடு போராடத் தேவையே இல்லை. மனிதன் என்பவன் யார் என்று சொன்னால், அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லக் கூடியவன். கள்வர்களிடத்திலும் கூட அனுசரிக்கப் பழக வேண்டும்.

## பிடிக்கவில்லை என்றாலும் ஏற்றுக்கொள்ளுங்கள்

உங்களிடம் யார் ஒருவர் அனுசரித்து போகவில்லையோ, அவர்களிடம் நீங்கள் அனுசரித்துப் போக வேண்டும். தினசரி வாழ்க்கையில், மாமியார்-மருமகள் இடையே அனுசரிப்பு இல்லாமல் போகும் பொழுது, இவர்களில் எவருக்கு இவ்வுலக பிடியில் இருந்து விடுபட வேண்டுகிறாரோ, அவர் அனுசரித்து போகத்தான் வேண்டும். கணவன்-மனைவி இருவரில், ஒருவர் கீறல் ஏற்படுத்தினால் மற்றவர் சீர்படுத்த வேண்டும், அப்பொழுதுதான் நீடித்த அமைதியான உறவு நிலைக்கும். அனுசரித்து போகாதவர்களை மக்கள் மூடன் என்பார்கள். சார்புடைய உண்மைகளில் பிடிவாதமும், வலியுறுத்தலும் அவசியமற்றவை. அனைத்து இடங்களிலும் அனுசரித்து கொள்பவனே மனிதன். அவன் திருடன் உடனும் அனுசரித்து கொள்வான்.

# மனைவியை மேம்படுத்துவது அல்லது அனுசரித்து நடப்பது

ஒவ்வொரு விஷயத்திலும் நாம் நம் எதிரில் இருப்பவரோடு அனுசரித்து நடக்கப் பழகி விட்டோமென்றால் அனைத்துமே எளிமையானதாகிவிடும். நாம் செல்லும் போது எதைக் கொண்டு செல்லப் போகிறோம்? ஒருவர் கூறுவார், ஐயா, “மனைவியை சரி செய்” என்பார். ஆனால் அவரை சரி செய்யச் சென்று நீங்கள் அல்லவா கோணலாகிப் போவீர்கள்! ஆகையால் மனைவியை சரி செய்வதில் ஈடுபடாதீர்கள், அவர் எப்படி இருந்தாலும் அவரை சரியென்றே கூறுங்கள். சதாசர்வ காலமும் அவருடன் தான் உங்கள் உறவு என்றால் பரவாயில்லை. ஆனால் இது ஒரு பிறப்புக் காலம் மட்டும் தானே! அதன் பிறகு நீங்கள் எங்கே, அவர் எங்கே? இருவரின் மரணக்காலங்களும் வேறுவேறு, இருவரின் கர்மவினைகள் வேறு, இதில் எந்தக் கொடுக்கல்-வாங்கலும் கிடையாது. இதன் பிறகு அவர் எங்கே செல்வாரோ, இதை யார் அறிவார் சொல்லுங்கள்? நீங்கள் அவரை சீர் செய்தீர்கள் என்றால், அடுத்த பிறப்பில் அவர் வேறு ஒருவருக்கு மனைவியாகலாம்.

ஆகையால் நீங்கள் அவரை சரி செய்யவும் வேண்டாம், அவர் உங்களை சரி செய்யவும் வேண்டாம். எப்படி கிடைத்திருக்கிறதோ, அப்படியே ஏற்றுக் கொள்ளுங்கள். யாருடைய இயல்பையும் யாராலும் மாற்ற முடியாது. நாயின் வால் வளைந்தே தான் இருக்கும். ஆகையால் நீங்கள் எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள். எப்படி இருக்கிறதோ, அப்படியே ஏற்கப் பழகுங்கள். அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுங்கள்.

## மனைவி தராசின் மறுதட்டு

**கேள்வியாளர்**: நான் மனைவியோடு அனுசரித்துச் செல்ல அதிக முயற்சிகள் மேற்கொள்கிறேன். ஆனால் அப்படி என்னால் நடக்க முடியவில்லை.

**தாதாஸ்ரீ**: அனைத்தும் முன் ஜென்மத்தின் கர்ம வினைக்குட்பட்டது. சீரற்ற போல்ட், சீறில்லாத நட், திருப்புளியை நீங்கள் திருப்புவதால் என்ன பயன்? இந்த பெண்கள் எல்லாரும் ஏன் இப்படி இருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தோன்றலாம். ஆனால் நீங்கள் ஒரு தட்டு என்றால், பெண்ணினம் தராசின் மற்றொரு தட்டு. உங்களிடம் எத்தனை குறைகள் இருக்கின்றனவோ, அந்த அளவுக்கு அவர் கோணலாகவே இருப்பார். அவ்வாறு தான் அனைத்தும் அமைக்கப்பட்டிருக்கிறது என்று நான் கூறியிருக்கிறேன் இல்லையா?

**கேள்வியாளர்**: ஏதோ அனைவரும் என்னை சரி செய்யவே வந்திருக்கிறார்கள் என்பது போன்று தோன்றுகிறது.

**தாதாஸ்ரீ**: உங்களை சரி செய்தே ஆக வேண்டும். சரி செய்யவில்லை என்றால் உலகம் எப்படி இயங்கும்? சரியாகவில்லை என்றால், நல்ல தந்தையாக எப்படி ஆக முடியும்? பெண்ணினம் எப்படி என்றால், அவர்கள் மாற மாட்டார்கள், ஆகையால் நாம் தான் மாற வேண்டும். பெண்களின் இயல்பு அவர்கள் மாறுவதைத் தடுக்கிறது. அவர்கள் மாற மாட்டார்கள். சரி,மனைவி என்றால் யார்?

**கேள்வியாளர்**: நீங்களே கூறுங்களேன்.

**தாதாஸ்ரீ**: “மனைவி தன் கணவனுடைய சமன்செய் எடை”. இந்த சமன் செய் எடை இல்லை என்று சொன்னால் மனிதன் ஒடிந்து விழுந்து விடுவான்.

**கேள்வியாளர்**: எனக்குப் புரியவில்லையே!

**தாதாஸ்ரீ**: எஞ்ஜின்களில் "சமன் செய் எடைகள்" பொருத்தப்படுகின்றன. இல்லையென்றால் "எஞ்ஜின்கள்" சிதைந்து விடும். இதைப் போலவே மனிதனின் "சமன் செய் எடைகள்" என்று பெண்களைச் சொல்லலாம். பெண் இருந்தால் அவன் துவண்டு விழ மாட்டான். இல்லை என்றால், எந்த ஒரு நோக்கமும் இல்லாமல் திக்குத் திசை தெரியாமல் திரிந்து கொண்டிருப்பான். பெண் என்ற ஒருத்தி இருப்பதால் தான் அவன் வீடு திரும்புகிறான், இல்லையென்றால் வீடு திரும்புவானா சொல்லுங்கள்?

**கேள்வியாளர்:** ஆம், வர மாட்டான்.

**தாதாஸ்ரீ**: ஆகையால் தான் பெண் "சமன் செய் எடையாக" இருக்கிறாள்.

## மோதல் ஒரு முடிவுக்கு வரும்

**கேள்வியாளர்**: பகலுக்குள்ளாக, காலை நடந்த மோதல் மறந்து போகிறது. மாலையில் புதிதாக வேறு ஒன்று ஆரம்பிக்கிறது.

**தாதாஸ்ரீ**: மோதல்களுக்குப் பின்னால் இருக்கும் சக்தியை நான் அறிவேன். விதண்டாவாதம் செய்து கொண்டிருக்கும் பெண்ணுக்குப் பின்னாலே எந்தச் சக்தி செயல்படுகிறது? பேசிய பிறகு மீண்டும் அனுசரித்துப் போக ஆரம்பிக்கிறார்கள். இவை அனைத்தும் ஞானம் காரணமாகத் தெரியத் தொடங்கும். நீங்கள் அனுசரித்து நடக்கப் பழக வேண்டும், ஏனென்றால், ஒவ்வொரு விஷயத்துக்கும் ஒரு முடிவு என்ற ஒன்று இருக்கிறது, அப்படி ஒரு வேளை நீடிக்கும் பொழுது நீங்கள் அனுசரிக்கவில்லை

என்றால் நீங்கள் உங்களுக்கும் மற்றவர்களுக்கும் தீமை செய்து கொள்கிறீர்கள்.

## பிரார்த்தனை வாயிலாக அனுசரிக்கப் பழகுதல்

**கேள்வியாளர்**: எதிரில் இருப்பவரைப் புரிந்து கொள்ள நான் என்னுடைய முயற்சியை மேற்கொண்டேன், அவர் என்னைப் புரிந்து கொள்ள முயல்வது என்பது அவரது முயற்சியைப் பொறுத்த ஒன்று என்று கொள்ளலாமா?

**தாதாஸ்ரீ**: நம்முடைய பொறுப்பு என்பது அவருக்குப் புரிய வைப்பதோடு முடிந்து போகிறது. பிறகு அவர் புரிந்து கொள்ளவில்லை என்றால் அதற்கு எந்த தீர்வும் கிடையாது. அப்போது நீங்கள் என்ன கூற வேண்டும் என்றால், "ஹே தாதா பகவான், இவருக்கு நல்ல புத்தியை அளியுங்கள்" என்பது மட்டுமே. அவரை நட்டாற்றிலே விட முடியாது. இது முக்கியமானது. இது தாதாஜியின் அனுசரித்து நடத்தல் விஞ்ஞானம். இது அற்புதமானது. எங்கே உங்களால் அனுசரித்து நடக்க முடியவில்லையோ, அதன் பிரதிபலன்களை நீங்கள் அனுபவித்து வருகின்றீர்கள் தானே? அனுசரிக்காமல் இருப்பது மூடத்தனம். ஏனென்றால் நான் என் அதிகாரத்தை விட்டுக் கொடுக்க இயலாது என்று ஒருவர் நினைக்கும் போது, அவர் தன்னுடைய வீழ்ச்சிக்கு வழி வகுத்துக் கொள்கிறார் என்று பொருள். அவருடைய வாழ்க்கை பெரிய துன்பமாக மாறி விடும். யார் இயல்பான வகையிலே பயணிக்கிறார்களோ, அவர்களைச் செல்ல விடுங்கள். இது கலியுகம். சூழல் அப்படிப்பட்டதாக இருக்கிறது. ஆகையால் மனைவி, நீங்கள் எதற்கும் பயனில்லாதவர் என்று கூறும் போது நீங்கள், ஆம் நீ சரியாகத்தான் சொல்கிறாய் என்று கூறுங்கள்.

## கடினமானவர்களோடு அனுசரித்துச் செல்லுங்கள்

**கேள்வியாளர்:** நடைமுறை வாழ்க்கையில் ஒருதரப்பில் மட்டுமே அனுசரித்துச் செல்லுதல் என்பது சாத்தியமில்லையே!

**தாதாஸ்ரீ:** நடைமுறை வாழ்க்கையில் அனுசரித்துச் செல்லுதல் தான் முக்கியமானது; இதைப் பார்த்து அக்கம் பக்கத்து வீட்டாரும் கூட, அனைத்து வீடுகளிலும் சண்டைகள் ஏற்படுகின்றன. ஆனால், இந்த வீட்டில் சண்டையே ஏற்படுவதில்லையே என்பார்கள். அவர்கள் வாழ்வியல் முறையை பிரமாதமானது எனப் புகழ்வார்கள். யாருடன் உங்களால் இசைந்து போக இயலவில்லையோ, அங்கே தான் உங்கள் சக்திகளை மலரச் செய்ய வேண்டும். சாதகமான நிலைகளில் உங்கள் சக்தி இருக்கவே இருக்கிறது. எதிர்மறையான சூழல்களில் தான் பலவீனங்களை எதிர்கொண்டு வெற்றி பெற வேண்டும். என்னால் ஏன் அனைவருடனும் இசைவாக நடக்க முடிகிறது? எந்த அளவுக்கு நீங்கள் அனுசரித்து நடக்கின்றீர்களோ, அந்த அளவுக்கு உங்கள் ஆற்றல் அதிகரிக்கும், உங்கள் இயலாமைகளும் பலவீனங்களும் தவிடுபொடியாகும். உண்மையான புரிதல் அப்போது தான் புலப்படும், அப்போது அனைத்து தவறான புரிதல்களும் தகர்ந்து போகும்.

மென்மையான இயல்புடையவர்களுடன் அனைவரும் அனுசரித்துச் சென்று விடுவார்கள். ஆனால் கடினமான, கோபமான, தீவிரமான இயல்புடையவர்களிடம் நீங்கள் அனுசரித்துச் செல்ல முடிந்தால் நீங்கள் வெற்றி பெற்றவர்கள். என்னதான் மோசமான மனிதனாக இருந்தாலும், அவருடன் கூட நீங்கள் அனுசரிக்க முடிந்தால், நீங்கள் உங்கள் கட்டுப்பாட்டை இழக்காமல் அனுசரிக்கப் பழகி விட்டீர்கள் என்றால், நீங்கள் வெற்றியாளர். உங்கள் கட்டுப்பாட்டை இழந்தால், அனைத்தும் வீண். உலகில் எந்தப் பொருளும் பொருத்தமான நிலையில் இருக்காது. நாம் தான் அவற்றுக்கேற்ப நம்மை அனுசரிக்கப் பழக வேண்டும்; அப்படிச் செய்தோம் என்று சொன்னால் உலகம்

அழகானதாக ஆகும். மாறாக அதைச் சரி செய்கிறேன் என்று புறப்பட்டால் உலகம் அவலட்சணமாக உருமாறிப் போகும். ஆகையால் அனைத்து இடங்களிலும் அனுசரிக்கப் பழகுங்கள். அனைத்துடனும் நீங்கள் அனுசரிக்க முடிந்தால், எந்தப் பிரச்சனையும் இல்லை.

## விதிகளைப் பார்க்காதீர்கள், சீராகுங்கள்!

ஞானி என்பவர் எதிரில் இருப்பவர் கடினமானவராக இருந்தாலும் கூட, அவருடன் அனுசரித்துச் சென்று விடுவார். ஞானிபுருஷரை கவனித்து வாழ்ந்தீர்கள் என்று சொன்னால், அனுசரிப்பை நீங்கள் கற்றுக் கொண்டு விடுவீர்கள். இதன் பின்னால் இருக்கும் அறிவியல் என்ன சொல்கிறது என்றால், வீதராக உணர்வு என்ற விருப்பு-வெறுப்பற்ற நிலை தான் காரணம். உங்களுக்கு உள்ளே சற்று பந்தம் இருப்பதன் காரணத்தால் தான் துயரம் ஏற்படுகிறது. நடைமுறையில் யார் செயலற்றுப் போய் விடுகிறார்களோ, அவர்களைக் கடினமானவர்கள் என்று கூறுகிறோம். உங்களுக்குத் தேவையென்றால், எதிரிலிருப்பவர் கடினமானவராக இருந்தால், அவரை சம்மதிக்கச் செய்ய வேண்டும். ஸ்டேஷனில் மூட்டை தூக்குபவர் அதிக பேரம் பேசுகிறார் என்றால், அவருக்கு கூடுதலான பணம் கொடுத்து சம்மதிக்க வைக்க வேண்டும். இல்லையென்றால் நமது மூட்டைகளை நாம் தான் சுமந்தாக வேண்டியிருக்கும்.

விதிகளைக் கருத்தில் கொள்ள வேண்டாம், தயவு செய்து சீராகுங்கள். எதிரில் இருப்பவரை சீராகச் சொல்வதனால் நேரம் தான் வீணாகிறது. எதிரில் இருப்பவரிடம் பல நூறு தவறுகள் இருந்தாலும், நீங்கள் உங்கள் தவறுகளில் கவனத்தைச் செலுத்தி முன்னேறுங்கள். இன்றைய காலகட்டத்தில் நீதியைக் கோர எங்கே நேரமிருக்கிறது? மோசமான நிலையை சூழல் எட்டியிருக்கிறது. எங்கே

பார்த்தாலும் குழப்பம், குளறுபடிகள் நிலவுகின்றன. வீட்டுக்குச் சென்றால் மனைவியின் குற்றச்சாட்டுக்கள், குழந்தைகளின் குற்றச்சாட்டுக்கள், வேலைக்குச் சென்றால் அங்கே முதலாளியின் குற்றச்சாட்டுக்கள், ரயிலில் சென்றால் கூட்டம் நெருக்கித் தள்ளுகிறது. எங்குமே அமைதி இல்லை. எங்காவது அமைதி கிடைக்க வேண்டுமில்லையா? யாராவது சண்டையிட்டால், நீங்கள் கருணையோடு என்ன நினைக்க வேண்டுமென்றால், ஐயோ பாவம் மிகவும் ஏமாற்றமும் எரிச்சலும் உடையவராக இருக்கிறாரே, இப்படி சச்சரவில் ஈடுபடுகிறாரே என்று நினையுங்கள். யார் ஏமாற்றத்தில் இருக்கிறார்களோ அவர்கள் பலவீனர்கள்.

## குற்றச்சாட்டா? வேண்டாம், அனுசரித்துச் செல்லுங்கள்

வீட்டிலும் அரவணைத்துச் செல்லப் பழக வேண்டும். நீங்கள் சத்சங்கத்திலிருந்து வீட்டுக்கு தாமதமாக வந்தால், வீட்டில் இருப்பவர்கள் என்ன சொல்லுவார்கள்? சற்றாவது நேரம்-காலம் பற்றி அக்கறை இருக்க வேண்டாமா? சரி அப்படியென்றால் சற்று முன்னதாகவே வீடு திரும்புவதில் என்ன பிரச்சனை இருக்கும்? எருது நகரவில்லை என்றால் செக்குக்காரன் அதனை தார்க்குச்சியால் குத்துவான், மாறாக எருது அதுவாகவே நகர்ந்து கொண்டே இருந்தால், செக்குக்காரன் தார்க்குச்சியால் குத்தப் போவதில்லையே! மனிதர்கள் இப்படி குத்தப்பட்டால், துன்புறுத்தப்பட்டால் மற்றவர்கள் மீட்க வருவார்கள். ஆனால் பாவம் அந்த விலங்கு யாரிடம் சென்று தன் குறையைச் சொல்லும்?

சரி, ஏன் இப்படி ஒரு நிலைமை கணவனுக்கு ஏற்பட்டது? ஏனென்றால் அவர் முன்னர் ஏராளமான குறைகளைக் கண்டார், அதன் விளைவாகத் தான் இது ஏற்பட்டது. அதிகாரத்தில் இருந்த போது அப்போது குறைகளை

மட்டுமே கண்டார். இப்போது அதிகாரம் பறிபோனது, ஆகையால் குற்றம் குறைகளைக் கண்டுகொள்ளாமல் இருக்க வேண்டும். ஆகையால் இப்போது “ப்ளஸ்-மைனஸ்” செய்து கொள்ளுங்கள்; அதாவது கடந்தகால கணக்கு வழக்குகளை சீர் செய்யுங்கள். யாரைப் பற்றியும் யாரிடமும் குற்றப்பத்திரிக்கை தாக்கல் செய்யாமல் இருங்கள். நாம் குற்றவாளியாகவும் ஆகத் தேவையில்லை. குற்றம் சுமத்துபவராகவும் ஆக வேண்டியதில்லை. யார் ஒருவர் உங்களை அவமானம் செய்தால், அதை நீங்கள் ஏற்றுக்கொண்டு, அதனை முன்ஜென்ம கர்மவினையின் வரவாக வைத்துக் கொள்ளுங்கள். யாரிடமும் சென்று குற்றம் சொல்ல வேண்டாம். இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? குற்றம் சுமத்துபவராக இருந்தால் பரவாயில்லையா? ஆனால் இப்படி நடப்பதற்கு பதிலாக முதலிலேயே அனுசரித்து நடக்கத் தொடங்கி விட்டால் என்ன தவறு இருக்க முடியும்?

## தவறாக பேசியதற்குத் தீர்வு

நடைமுறையில் அனுசரித்து நடப்பதை இந்தக் காலத்தில் ஞானம் என்று அழைக்கப்படுகிறது. ஆம், அனுசரித்துச் செல்லுங்கள், உங்கள் முயற்சி தோல்வியடைந்தால் மீண்டும் முயலுங்கள். நீங்கள் ஒருவரைப் பற்றித் தவறாகப் பேசுகிறீர்கள், உங்கள் நாக்கு உங்கள் கட்டுப்பாட்டில் இல்லை. ஆனால் பின்னர் நீங்கள் அதைத் தவறு என்று உணர்கிறீர்கள். நம்மால் கடந்த காலத்திற்குச் சென்று சம்பவத்தைச் சீர் செய்ய முடியாது. ஆகையால் உணர்வு வந்தவுடனேயே அவரிடம் சென்று, நண்பா, அந்த நேரத்தில் ஏன் என்றே தெரியவில்லை, அப்படி தவறுதலாக பேசி விட்டேன், என்னை மன்னித்து விடு என்று கூற வேண்டும். இப்போது இசைவாக நடந்திருக்கிறீர்கள், அனுசரிக்கத் தொடங்கியிருக்கிறீர்கள், இதில் என்ன ஆட்சேபம் இருக்க முடியும்?

**கேள்வியாளர்:** இல்லை, ஒன்றும் இருக்க முடியாது.

## அனைத்து இடங்களிலும் அனுசரித்தல்

**கேள்வியாளர்:** பலமுறை ஒரே சமயத்தில் இரு நபர்களுடன் ஒரே நேரத்தில் அனுசரித்து நடக்க வேண்டியிருக்கையில், இந்த நிலைமையை எப்படி சமாளிப்பது?

**தாதாஸ்ரீ:** இருவருடனும் அனுசரித்து இசைவாக நடக்க முடியும். ஏழு பேர்களை அனுசரித்துச் செல்ல வேண்டுமென்றாலும் செய்ய முடியும். ஒருவர், நான் சொல்வதைப் போல் செய்கிறாயா என்று கேட்டால் ஆஹா செய்து விட்டால் போகிறது என்று சொல்லுங்கள். அடுத்தவருக்கும் இதையே சொல்லுங்கள், நீங்கள் சொன்னால் செய்து விடுகிறேன் என்று சொல்லுங்கள். விதிக்கப்பட்டதைத் தாண்டி எதுவும் நடக்கப் போவதில்லை. ஆகையால் சண்டை ஏற்படாமல் இருக்க எதையாவது செய்யுங்கள். முக்கியமாக அனுசரித்து நடத்தல் அவசியம். ஆம் என்றால் முக்தி கிடைக்கும். நாம் ஆம் என்று சொன்னோம், இருந்தாலும் தீர்மானிக்கப்பட்டதைத் தாண்டி ஏதாவது நடக்குமா? ஆனால் மறுத்துச் சொன்னால் ஏகப்பட்ட பிரச்சனைகளை வரவேற்பது போலாகும்.

வீட்டில் கணவன்-மனைவி இருவரும் அனுசரித்துச் செல்வது என்பதைத் தீர்மானம் செய்து கொள்ள வேண்டும், அப்போது தீர்வுகள் தாமாகவே பிறக்கும். அதிக இழுபறியில் ஒருவர் இறங்கினால், மற்றவர் அனுசரித்துப் போக முடிவு செய்து செயல்பட்டால், தீர்வு பிறக்கும். ஒரு மனிதனின் கையில் வலி ஏற்பட்டிருந்தது, ஆனால் அதை அவர் மற்ற கையிடம் கூறவில்லை; மற்ற கையானது வலிக்கும் கையைப் பிடித்து விட்டு இசைவாக நடந்தது. இந்த வகையில் அனுசரித்து நடந்தால் தீர்வுகள் காண முடியும். அனைத்து

இடங்களில் அனுசரித்து நடக்கவில்லை என்றால் அனைவருமே பித்துப் பிடித்தவர்களாவோம். மற்றவர்களைத் துன்புறுத்திக் கொண்டே இருந்தோம் ஆகையால், பித்துப் பிடித்தவர்கள் ஆனோம். ஏதோ ஒருமுறை, இருமுறை என சில முறை ஒரு நாயைச் சீண்டினால் அது அடங்கிப் போகும். ஆனால் மீண்டும் மீண்டும் தொடர்ந்து சீண்டிக் கொண்டே இருந்தீர்கள் என்றால், அது கடித்து விடும். நீங்கள் அதை தினமும் சீண்டிக் கொண்டிருக்கிறீர்கள், கருணையற்றவர், தண்டிக்கப்பட வேண்டியவர் என்று அதற்கும் தெரிந்து விடும். இதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். சற்றுக்கூட சிரமத்தை ஏற்படுத்தக் கூடாது. அனைத்து இடங்களிலும் "அட்ஜஸ்ட்" செய்யுங்கள், அனுசரித்துச் செல்லுங்கள்.

அனுசரித்துச் செல்லும் கலை யாருக்குக் கைகூடுகிறதோ, அவர் உலகியலில் இருந்து மோக்ஷப்பாதையை நோக்கித் திரும்பி விடுவார். அனுசரித்துச் செல்வதே ஞானம். யார் அனுசரித்துச் செல்வதைக் கற்றுக் கொண்டார்களோ, அவர்கள் கரை சேர்ந்தவர்கள். எதை அனுபவிக்க வேண்டுமோ, அதை அனுபவித்தே தீர வேண்டும். ஆனால் யாருக்கு அனுசரித்து நடக்கத் தெரிந்து விட்டதோ, அவருக்கு எந்தக் கஷ்டமும் இருக்காது, கணக்கு தெளிவாகி விடும். திருடர்கள் வந்தால் கூட, அவர்களுடனும் அனுசரித்து நடக்கவில்லை என்றால் அவர்கள் துன்பம் தருவார்கள். இதற்கு பதிலாக அவர்களை அனுசரித்து நடப்பது என்று தீர்மானம் செய்து உங்கள் வேலையை சாதிக்கப் பழக வேண்டும். பிறகு அவரிடம், நண்பா, உங்களுக்கு என்ன வேண்டும்? நான் புனித யாத்திரைக்குச் சென்று கொண்டிருக்கிறேன்; ஆகையால் என்னிடம் அதிகம் பணம் இல்லை என்று தெரிவித்து அவருக்கு இசைவாக நடக்க வேண்டும்.

மனைவி உணவு தயாரித்திருந்தார் என்றால், அதில் குற்றங்குறைகளை நீங்கள் கண்டுபிடித்தால் அது தவறு, அப்படி நீங்கள் செய்யக் கூடாது. தவறே செய்யாத ஒருவரைப் போல

நீங்கள் அவர் தவறைச் சுட்டிக் காட்டுகிறீர்கள். யாருடன் நீங்கள் உங்கள் வாழ்க்கை முழுவதையும் கழிக்க இருக்கிறீர்களோ, அவரை அனுசரித்துப் போகக் கூடாதா? உங்களால் மற்றவருக்குத் துயரம் அளிக்கப்படுமேயானால், அது எப்படி பகவான் மஹாவீரர் காட்டிய சமயநெறி என்று கூறுவது? வீட்டில் இருப்பவர்கள் கண்டிப்பாக துக்கப்படவே கூடாது. இது தான் மிக முக்கியம்.

## வீடு ஒரு பூங்காவனம்

ஒரு சகோதரர் என்னிடம் கூறினார், தாதாஜி என் மனைவி வீட்டில் இப்படிச் செய்கிறார், அப்படிச் செய்கிறார் என்று. அப்போது நான் அவரிடம் கூறினேன், உங்கள் மனைவியிடம் கேட்டால் அவர் என்ன கூறுவார் என்றால் உங்களுக்கு குறைவான அறிவு என்பார். தன் மனைவியைப் பற்றிக் குற்றச்சாட்டைக் கூறும் போது தனக்கு நீதி கிடைத்தால் போதும் என்று அவர் ஏன் நினைக்கிறார்? அப்போது அவர் மேலும் கூறினார், என் குடும்ப வாழ்க்கை நாசமாகி விட்டது, குழந்தைகள் நாசமாகி விட்டார்கள், மனைவி மோசமாக இருக்கிறார் என்று புலம்பினார். நான் கூறினேன், எதுவுமே நாசமாகி விடவில்லை. உங்கள் பார்வை சரியில்லை, நீங்கள் அணுகுவது தான் சரியில்லை. ஒவ்வொருவரின் இயல்பையும் புரிந்து கொள்ள வேண்டும்.

வீட்டில் அனுசரித்துப் போக முடியவில்லை என்பதற்கு என்ன காரணம் இருக்க முடியும்? குடும்பத்தில் அதிக உறுப்பினர்கள் இருந்தால், அவர்கள் அனைவருடனும் இசைவு இருப்பதில்லை. மனிதர்களுடைய இயல்பு ஒன்று போல இருப்பதில்லை. யுகத்திற்கு ஏற்ப இயல்பும் அமைகிறது. க்ருதயுகத்தில் ஒருவரோடு ஒருவர் இசைவு இருந்தது. வீட்டில் 100 உறுப்பினர்கள் இருந்தாலும் கூட, அனைவரும் வீட்டுத் தலைவர் கூறுவதைப் போலவே நடந்தார்கள். ஆனால் இந்தக்

கலியுகத்தில் பெரியவர் ஏதாவது கூறினால், அவரது அதிகாரத்தை எதிர்ப்பார்கள், வசை பாடுவார்கள். தந்தை ஏதாவது கூறினால் அவருக்கும் இதே கதி தான்.

இப்போது ஒவ்வொருவரும் மனிதன் தான் என்றாலும், உங்களால் அடையாளம் காண முடிவதில்லை. வீட்டில் 50 நபர்கள் இருக்கிறார்கள் ஆனால் உங்களால் அடையாளம் காண முடியவில்லை என்றால் பிரச்சனை ஏற்பட்டுக் கொண்டு தான் இருக்கும். அவர்களிடமிருக்கும் வேறுபாடுகளை இனம் காண வேண்டும். எப்போது பார்த்தாலும் வீட்டில் ஒருவர் புலம்பிக் கொண்டே இருக்கிறார், குற்றம் சொல்லிக் கொண்டே இருக்கிறார் என்றால் அது அவரது இயல்பு. ஆகையால் நீங்கள் ஒருமுறை இதைப் புரிந்து கொண்டால் போதுமானது. இதை உள்ளபடியே உங்கள் உள்ளத்தில் ஏற்றுக் கொண்டு விட்டால், பிறகு ஆராய்ச்சி செய்யவோ வருத்தப்படவோ என்ன இருக்கிறது?

சிலருக்கு இரவு வேளைகளில் தாமதமாகத் தூங்கும் பழக்கம் இருக்கிறது, சிலருக்கு சீக்கிரம் தூங்கும் பழக்கம் இருக்கிறது எனும் போது இவர்கள் இருவரிடையே எப்படி இசைவை ஏற்படுத்துவது. மேலும் குடும்பத்தில் அனைவரும் ஒன்றாக இருக்கும் போது அப்போது என்னவாகும்? வீட்டில் ஒருவர் உங்களைப் பார்த்து உங்களுக்கு குறைவான அறிவு உள்ளது என்று கூறினால், அப்படிக் கூறுவது தான் அவரது இயல்பு என்று நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஆகையால் நீங்கள் அவருக்கு ஏற்ப அனுசரித்து நடக்க வேண்டும். இதற்கு பதிலாக நீங்கள் பதிலுக்கு பதில் கூறிக் கொண்டிருந்தால், களைப்புத் தான் உங்களுக்கு ஏற்படும். ஏனென்றால், அவர் உங்களோடு மோதலில் ஈடுபடுவார், நீங்களும் அவருடன் மோதலில் ஈடுபட்டால், உங்களுக்கும் பார்வை இல்லை என்பது உறுதியாகிவிடும், இல்லையா? நான் என்ன கூற விரும்புகிறேன் என்றால், இயற்கையின் அறிவியலைப் புரிந்து கொள்ளுங்கள்.

## பூங்காவில் இருக்கும் மலர்களின் நிறங்களும் மணங்களும் வேறுபட்டவை

உங்கள் இல்லமே பூங்கா. க்ருதயுகம், த்ரேதாயுகம் மற்றும் த்வாபர யுகங்களில் வீடு பூங்காக்களுக்குச் சமமானதாக இருந்தது. ஒரு பூங்காவில் வெறும் ரோஜா இருக்கிறது, ஒன்றிலே சம்பங்கி இருக்கிறது. இப்போதெல்லாம் வீடு தோட்டத்தைப் போலவே இருக்கிறது. ஆகையால் நாம் ஒன்று ரோஜா, ஒன்று சம்பங்கியாக இருக்கிறது என்று ஆராய்ந்து புரிந்து கொள்ள வேண்டும். க்ருதயுகத்திலே ஒரு வீட்டிலே ரோஜா இருந்தால், வேறு ஒரு வீட்டில் சம்பங்கியாக இருந்தன. ஒரு குடும்பத்தில் அனைவருமே ரோஜா செடிகளாக இருந்ததால், எந்த சிரமமும் இல்லை. ஆனால் இன்றோ வீடுகள் எல்லாம் பூங்காவனங்களைப் போல ஆகி விட்டன. ஒரே ஒரு வீட்டிலேயே ரோஜா, சம்பங்கி என பலவகை மலர்கள் இருக்கின்றன. ஆனால் ரோஜா, நீ ஏன் என்னைப் போல இல்லை என்று சம்பங்கியைப் பார்த்துக் கத்துகிறது. உன் வண்ணத்தைப் பார், ஒரே வெள்ளையாக இருக்கிறது, ஆனால் என் நிறமோ அருமையாக இருக்கிறது. அப்போது சம்பங்கி கூறுகிறது, உன் மீது ஒரே முட்களாக இருக்கின்றன என்கிறது. ரோஜா என்றால் முட்கள் அதிகம் இருக்கும், சம்பங்கியிடம் முட்கள் இருக்காது. சம்பங்கியின் மலர் வெண்மையாக இருக்கும், ரோஜாவின் நிறமோ சிவப்பாக இருக்கும். இந்தக் கலியுகத்தில் ஒரே இல்லத்தில் பலவகையான செடிகள் இருக்கின்றன. அதாவது வீட்டில் தோட்டத்தில் இருப்பது போல இருக்கிறது. ஆனால் இதை மனிதர்கள் புரிந்து கொள்ளாத காரணத்தால், துன்பமும் துயரமும் ஏற்படுகின்றன. உலகம் இந்தக் காட்சியைக் காண்பதில்லை, மற்றபடி யாருமே கெட்டவர்கள் இல்லை. இந்தக் கருத்து வேறுபாடுகள் எல்லாம் அஹங்காரம் காரணமாகவே ஏற்படுகின்றன. யாரால் இதைக் காண முடியவில்லையோ அவருக்கு அஹங்காரம் இருக்கிறது என்று பொருள். எனக்கு அஹங்காரம் கிடையாது, ஆகையால்

உலகில் யாருடனும் எனக்கு கருத்து வேறுபாடு என்பதே கிடையாது. என்னால் இது ரோஜா, இது சம்பங்கி என்று அடையாளம் கண்டுகொள்ள முடிகிறது. இப்படி நான் அனைத்து மலர்களையும் அடையாளம் கண்டு கொள்கிறேன். அதாவது மலர்வனத்தைப் போல ஆகி விட்டது. இந்தப் பூங்காவனங்கள் பாராட்டுக்குரியவை இல்லை? உங்களுக்கு எப்படி தோன்றுகிறது?

**கேள்வியாளர்:** சரிதான்.

**தாதாஸ்ரீ:** அதாவது இயல்பில் மாற்றம் ஏற்படுவதில்லை. அதற்கென தனித்துவ குணமிருக்கிறது, எந்த மாறுதலும் கிடையாது. நான் அனைத்து இயல்புகளையும் அறிந்தவன், ஆகையால் உடனடியாக அடையாளம் கண்டு கொள்கிறேன். இதன் காரணமாக நான் ஒவ்வொருவருடனும் அவரது இயல்புக்கு ஏற்றவாறு நடந்து கொள்கிறேன். மதிய வேளை கோடை வெப்பத்தில் நீங்கள் களிக்க விரும்பினால், அவதி உங்களுக்குத் தான். இது பனிக்காலச் சூரியன், இது வேனிற்காலச் சூரியன் என்று வேறுபடுத்திப் பார்த்துப் புரிந்து கொண்டால், ஏது சிரமம்?

நான் இயல்பை அடையாளம் கண்டு கொள்கிறேன், ஆகையால் நீங்கள் என்னோடு மோத நினைத்தாலும் கூட, நான் மோத மாட்டேன், அப்படி நடக்க விட மாட்டேன். இல்லையென்றால் இருவருக்குமே விபத்து ஏற்பட்டு, இருவருடைய அங்கங்களும் சேதமாகும். ஒருவருடைய காரின் பம்பர் உடைந்தால் உள்ளே இருப்போரின் நிலை என்ன ஆகும்? அமர்ந்திருப்போரின் நிலை மோசமாகும் இல்லையா? ஆகையால் இயல்பை அடையாளம் காணுங்கள். வீட்டில் உள்ள அனைவரின் இயல்பையும் அடையாளம் கண்டு கொள்ளுங்கள்.

கலியுகத்தில் இயல்பு என்பது வயலில் உள்ள ஒரு பயிரைப் போன்றது அல்ல, தோட்டம் போன்றது. அங்கு ஒன்று மல்லிகை, ஒன்று ரோஜா, ஒன்று சம்பங்கி, ஒன்று முல்லை. இங்கே அனைத்து மலர்களும் மோதுகின்றன. ஒன்று என்னுடையது இப்படிப்பட்டது என்று கூறும், மற்றது இல்லை என்னுடையது இப்படிப்பட்டது என்று கூறும். உன்னிடம் முட்கள் இருக்கின்றன என்று ஒன்று கூறினால், போ, நீ எனக்கு இணையானவனே கிடையாது என்று மற்றொன்று கூறும். இப்படிப்பட்ட மோதல்கள் நிகழ்ந்த வண்ணம் தான் இருக்கும்.

## கவுண்டர்புல்லியின் அற்புதம்

நாம் முதலில் நமது கருத்தை முன்வைக்க வேண்டும். மற்றவரிடம், இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று கேளுங்கள். அவர் தனது கருத்தை மாற்றிக் கொள்ளவில்லை என்றால், நீங்கள் உங்கள் கருத்தை விட்டுக் கொடுத்து விடுங்கள். மற்றவருக்கு எந்தக் காரணத்தாலும் வருத்தம் ஏற்பட்டு விடக்கூடாது என்பதே நமது நோக்கமாக இருக்க வேண்டும். நமது கருத்தை மற்றவர்களின் மீது திணிக்கக் கூடாது. அடுத்தவர் கருத்தை நாம் நமது கருத்தில் கொள்ள வேண்டும். நான் அனைவரின் கருத்துக்களையும் ஏற்றுக் கொண்டு தான் ஞானியாகி இருக்கிறேன். நான் எனது கருத்தை மற்றவர்கள் மீது திணிக்க ஆரம்பித்தேன் என்று சொன்னால் நான் பக்குவமில்லாதவனாகவே இருப்பேன். நமது கருத்துக்கள் யாருக்கும் துக்கம் ஏற்படுத்துபவையாக இருக்கக் கூடாது.

உங்கள் மூளைச்சுழற்சிகள் நிமிடத்திற்கு 1800 என்ற வீதத்தில் இருக்கிறது. அடுத்தவரது மூளைச்சுழற்சிகள் நிமிடத்திற்கு 600 என்ற வீதத்தில் இருக்கிறது எனும் போது, நீங்கள் உங்கள் கருத்தை அவர் மீது திணிக்கும் வேளையில்

அவரது “எஞ்ஜின்” தகர்ந்து போகும். அவரது “கியர்கள்” அனைத்தையும் மாற்ற வேண்டியிருக்கும்.

**கேள்வியாளர்**: சுழற்சிகள் என்றால் என்ன பொருள்?

**தாதாஸ்ரீ**: இது சிந்திக்கும் வேகத்தைக் குறிக்கிறது. இது ஒவ்வொருவருக்கும் வேறுபட்டதாக இருக்கிறது. ஏதோ ஒன்று சம்பவிக்கிறது என்று சொன்னால், இந்த எண்ணச் செயல்பாடுகள் ஒரே நிமிடத்தில் பல விஷயங்களை வெளிப்படுத்தும். பெரிய பெரிய தலைவர்களுடைய மூளைச் சுழற்சி வேகம் நிமிடத்திற்கு 1200 என்ற வீதத்தில் இருக்கிறது; என்னுடையது 5000 என்ற வேகத்தில் இருக்கிறது. மஹாவீரருடையது ஒரு இலட்சம் என்ற வேகத்தில் இருந்தது.

கருத்து வேறுபாடுகளின் பின்னணியில் இருக்கும் காரணம் என்ன? உங்கள் மனைவியின் சுழற்சிகள் 100ஆக இருக்கலாம், உங்களுடையது 500ஆக இருக்கலாம்; உங்களுக்கு இடையில் ஒரு கவுண்டர்புல்லியை பொருத்த உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆகையால் தீப்பொறி பறக்கிறது, மோதல்கள் ஏற்படுகின்றன. சில வேளைகளில் எஞ்ஜின் கூட நொறுங்கிப் போகிறது. சரி, சுழற்சிகள் என்றால் என்ன என்பதைப் புரிந்து கொண்டீர்கள் இல்லையா?

நீங்கள் இந்தக் கூலித் தொழிலாளியோடு பேசினால் நீங்கள் கூறுவது அவருக்குப் புரியாமல் போகலாம். அவருடைய சுழற்சி 50ஆக இருக்கும், உங்களுடையது 500 ஆக இருக்கிறது. ஒருவருக்கு 1000ஆக இருக்கிறது, வேறு ஒருவருக்கு 1200ஆக இருக்கிறது. ஒவ்வொருவருடைய வளர்ச்சி எப்படி இருக்கிறதோ, அதற்கு ஏற்ப சுழற்சிகள் இருக்கின்றன. இடையில் “கவுண்டர்புல்லியை” பொருத்தினால், அப்போது உங்கள் கருத்து அவரைச் சென்று அடையும். “கவுண்டர்புல்லி” அதாவது உங்களுக்கு இடையில் ஒரு தடையை ஏற்படுத்தி, உங்கள் சுழற்சிகளின் வேகத்தை

மட்டுப்படுத்துவது. நான் ஒவ்வொரு மனிதருடனும் பேசும் போது "கவுண்டர்புல்லியை" பொருத்தி விடுகிறேன். நம் மனதில் இருக்கும் அஹங்காரத்தை நீக்கி விடுவதாலேயே வேலை நிறைவேறி விடும் என்பதில்லை. "கவுண்டர்புல்லியையும்" கூட நீங்கள் ஒவ்வொருவரோடும் உறவாடும் போது மனதில் கொள்ள வேண்டும். இந்தக் காரணத்தால் தான் எனக்கு யாருடனும் கருத்து வேறுபாடுகளே ஏற்படுவதில்லை. எனக்குத் தெரியும், இந்தச் சகோதரனுக்கு இத்தனை சுழற்சிகள் இருக்கின்றது ஆகையால், அந்த வேகத்துக்கு ஏற்ப, "கவுண்டர்புல்லியைப்" பொருத்துகிறேன். நான் சிறு பிள்ளைகளுடனும் ஒருங்கிணைந்து போவேன், ஏனென்றால் அவர்களோடு நான் 40 சுழற்சிகள் வேகத்தில் உரையாடுகிறேன். இதனால் நான் பேசுவது அவர்களைச் சென்றடைகிறது, இல்லையென்றால் அந்த இயந்திரம் சிதறிப் போகும்.

**கேள்வியாளர்:** மற்றவரின் மட்டத்திற்கு இறங்கினால் தான் உரையாடல் நடக்கும் என்று கூறுகிறீர்களா?

**தாதாஸ்ரீ:** ஆம், அவரது சுழற்சிகளுக்கு இணையாக ஆகும் போது தான் நிகழும். உங்களோடு பேசும் வேளையில் எனது சுழற்சிகள் எங்கிருந்து எதுவரை சென்று விட்டன. உங்களுக்கு "கவுண்டர்புல்லி" பொருத்துவது தெரியவில்லை என்றால், குறைந்த சுழற்சிகள் கொண்ட "எஞ்ஜினை" கடிந்து கொள்வதால் என்ன பயன்? உங்களால் "கவுண்டர்புல்லியைப்" பொருத்த முடியவில்லை என்பதில் குற்றம் உங்களிடம் தான்.

## "ப்யூஸைப்"(ஒட்டி இணைப்பு) பொருத்துவது பற்றித் தெரிந்து கொள்ளுங்கள்

இந்த இயந்திரம் எப்படிப்பட்டது என்பதை புரிந்து கொள்ளுங்கள். அதன் "ப்யூஸ்"(ஒட்டி இணைப்பு) பழுதாகி

விட்டால் எப்படி அதைச் சீர் செய்வது. எதிரில் இருப்பவரின் இயல்புக்கு ஏற்ப நீங்கள் அனுசரித்துச் செல்ல வேண்டும். அவரது "ப்யூஸ்"(ஒட்டி இணைப்பு) பழுதாகிப் போனால், அப்போதும் அனுசரித்துச் செல்லுங்கள். ஆனால் எதிரில் இருப்பவரால் அனுசரிக்க முடியவில்லை என்றால் என்னவாகும்? "ப்யூஸ்"(ஒட்டி இணைப்பு) பழுதாகி விட்டது, சுவற்றில் போய் மோதுவார், கதவின் மீது மோதுவார், ஆனால் வயர் பழுதாகவில்லை, இணைப்பு பழுதாகவில்லை. ஆகையால் யாராவது "ப்யூசைப்"(ஒட்டி இணைப்பை) பொருத்தினால் மீண்டும் சரியாகி விடுவார். இல்லையென்றால் அதுவரை எரிச்சலிலேயே இருப்பார்.

## குறுகியகால வாழ்க்கை, பிரச்சனைகள் நெடியவை

மிகப்பெரிய துக்கம் எது? அனுசரித்துப் போகாமல் இருத்தல். அப்படியென்றால் அனைத்திடங்களிலும் அனுசரித்து நடப்பது என்ற வழிமுறையைப் பின்பற்றுவதில் என்ன சங்கடம் இருக்க முடியும்?

**கேள்வியாளர்:** அதற்கு முயல வேண்டுமில்லையா!

**தாதாஸ்ரீ:** எந்த முயற்சியும் வேண்டாம். நான் கூறுவதைப் பின்பற்றி நடந்தாலே போதும்; அதாவது தாதாஜி கூறியிருக்கிறார் அனைத்து இடங்களிலும் அனுசரித்து நடக்க வேண்டும் என்று, அப்போது தாமாகவே அனுசரித்து நடக்கத் தொடங்கி விடுவீர்கள். மனைவி உங்களைத் திருடன் என்று கூறினால், நீ கூறுவது சரிதான் என்று கூறிவிடுங்கள். 150 ரூபாய்க்குப் புடவை வாங்க வேண்டும் என்று கூறினால் நீங்கள் மேலும் 25 ரூபாய்களைக் கொடுத்துப் பாருங்கள்.

ப்ரம்மனின் ஒருநாள் என்பது நமது வாழ்க்கை முழுவதற்கும் இணையாகும். ப்ரம்மனுடைய ஒருநாள்

வாழ்க்கையை நாம் வாழவா இத்தனை போராட்டங்களும்-பிரச்சனைகளும்? ப்ரம்மனுடைய 100 ஆண்டுகள் ஆயுட்காலத்தை நாம் வாழவேண்டியிருந்தால், ஒருவேளை நாம் ஏன் அனுசரித்துப் போக வேண்டும் என்ற வாதம் சரியாக இருக்கலாம். ஆனால் இதை விரைவாகத் தீர்க்க வேண்டும், இதற்காக நாம் என்ன செய்ய வேண்டும்? அனுசரித்துப் போக வேண்டுமா அல்லது போராடிப் பார்க்க வேண்டுமா? ஆனால் இதுவோ வெறும் ஒருநாள் காலம் தானே, விரைந்து முடிந்து போகுமே! அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்வதன் வாயிலாக வேலையைச் சுருக்கச் செய்ய வேண்டுமே தவிர அதை சவ்வு போல நீட்டித்துக் கொண்டிருக்கக் கூடாது. மனைவியோடு சண்டை போட்ட பிறகு இரவில் உறக்கம் வருமா? பின்னர் காலையில் உணவும் சரியான வகையில் கிடைக்காது.

## ஞானியின் ஞானக்கலையைக் கைக்கொள்ள வேண்டும்

ஒருநாள் மனைவி தன் கணவனிடம், எனக்குச் சேலை வாங்கித் தருவீர்களா என்று கேட்டால், சேலையைக் கணவன் வாங்கித் தர வேண்டும். அதன் விலை என்ன என்று கணவன் கேட்கிறான், அப்போது மனைவி, 2200 ரூபாய் தான், அதிகம் இல்லை என்கிறாள். அப்போது கணவன், இதற்கான பணத்தை நான் எங்கிருந்து பெறுவேன் என்று கேட்க, வேறு வழியில்லாமல் 200-300 ரூபாய்க்கு ஒரு புடவை என்றால் பரவாயில்லை என்கிறான். இதனைக் கண்டு மனைவி முகத்தை கோபத்தோடு வைத்துக் கொண்டால், நிலமையை சிந்தனை செய்து பாருங்கள். ஏன் தான் கல்யாணம் செய்து கொண்டோம் என்று கணவனுக்குத் தோன்றுகிறது. திருமணம் செய்து கொண்ட பின்னர் வருந்தி என்ன பயன்? இதுவே துக்கம்.

**கேள்வியாளர்**: அப்படியென்றால் மனைவி கேட்டாள் என்றால் 2200 ரூபாய்க்குப் புடவையை வாங்கித் தர வேண்டும் என்கிறீர்களா?

**தாதாஸ்ரீ**: வாங்கித் தருவதோ, தராமல் இருப்பதோ அது உங்களைச் சார்ந்த விஷயம். கோபித்துக் கொண்டு ஒவ்வொரு நாள் இரவும் நான் சமையல் செய்ய மாட்டேன் என்பாள் மனைவி, நீங்கள் என்ன செய்வீர்கள்? எங்கிருந்து சமையல்காரனைக் கொண்டு வருவீர்கள்? ஆகையால் கடன் வாங்கியாவது அந்தப் புடவையை வாங்கித் தர வேண்டிய சூழல் ஏற்படுகிறது.

அந்தப் புடவை வேண்டாம் என்று உங்கள் மனைவியே தீர்மானிக்கும்படி நீங்கள் நடந்து கொள்ள வேண்டும். உங்களுக்கு மாதம் 800 ரூபாய் கிடைக்கிறது என்றால், நீங்கள் மாதாந்திரச் செலவுகளுக்கு 100 ரூபாயை வைத்துக் கொண்டு 700 ரூபாயைக் கொடுங்கள். அப்போது புடவை வாங்கித் தாருங்கள் என்று உங்களைக் கேட்பாரா? ஒருவேளை, நீங்களே கூட அந்தப் புடவை மிக அழகாக இருந்தது, நீ ஏன் வாங்கிக் கொள்ளவில்லை என்று கேட்டால், அதற்கான ஏற்பாட்டை அவரே தான் செய்து கொள்ள வேண்டியிருக்கும். நாம் ஏற்பாட்டைச் செய்ய வேண்டி இருந்தால், அப்போது அவர் நம்மீது அழுத்தம் தருவார். இந்தக் கலையை நான் ஞானம் அடையும் முன்பே தெரிந்து கொண்டேன். பின்னர் நான் ஞானியானேன். அனைத்துக் கலைகளுமே என்னிடத்தில் வந்து விட்டன, பிறகு தான் ஞானம் ஏற்பட்டது. இப்போது கூறுங்கள், இந்தக் கலை இல்லாத காரணத்தால் தானே துக்கம் உண்டானது. உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது?

**கேள்வியாளர்**: ஆம், சரி தான்.

**தாதாஸ்ரீ**: இது உங்களுக்குப் புரிந்ததா? இதில் தவறு நம்முடையது தானே? கலை நம்மிடம் இல்லை என்பது தானே

காரணம். கலையைக் கற்றுக் கொள்ள வேண்டிய தேவை இருக்கிறது.

## மோதல்களின் மூலக் காரணம்: அறியாமை

**கேள்வியாளர்:** மோதல்கள் ஏற்படக் காரணம் என்ன? ஒத்துப் போகாமை தான் காரணமா?

**தாதாஸ்ரீ:** அறியாமை தான் காரணம். உலகம் என்றாலே யாருடைய இயல்பும் மற்றவரோடு இசைந்து செல்லாது என்பது தான். இந்த ஞானம் பிறக்க வேண்டும். அதற்கு ஒரே வழி, அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்ல வேண்டும். யாராவது உங்களை அடித்தால், நீங்கள் அனுசரித்து நடக்க வேண்டும்.

இதற்கு நான் ஒரு எளிய, நேரடியான வழிமுறையைக் கூறுகிறேன். இந்த மோதல்கள் தினசரி நடக்கின்றனவா? உங்கள் கடந்த காலக் கர்மவினைகள் பலன் தரும் வேளையில் தான் இவை நடக்கின்றன. அந்த வேளையில் நாம் அனுசரித்துச் செல்ல வேண்டும். வீட்டிலே மனைவியுடன் சண்டை ஏற்பட்டால், அதன் பிறகு அவரை ஹோட்டலுக்குக் கூட்டிச் சென்று, சாப்பிட வைத்து சந்தோஷப்படுத்த வேண்டும். இதன் பின்னர் உறவிலே எந்த நெருக்கடியோ, அழுத்தமோ இருக்காது.

உலகில் எந்த ஒரு பொருளும் நமக்கு இசைவாக பொருத்தமாக இருக்காது. நாம் அவற்றுக்கு ஏற்ப நம்மை மாற்றியமைத்துக் கொண்டால் உலகம் அழகாக ஆகும்; மாறாக அதைச் சீர் செய்ய முனைந்தோம் என்று சொன்னால் உலகம் விகாரமானதாக ஆகிவிடும். ஆனால் நாம் அவற்றுக்கு பொருத்தமாக நடந்தோமென்றால் பிரச்சனைகள் ஏதும் இருக்காது.

## தாதாஜி அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்வார்

ஒருமுறை கூட்டு நன்றாக இருந்தது, ஆனால் அதில் உப்பு அதிகம் இருந்தது. ஆனால் உப்பு அதிகம் இருந்தாலும் அதை உட்கொண்டு தானே ஆக வேண்டும்! ஆகையால் “ஹீராபா” (தாதாஜியின் மனைவி) உள்ளே சென்ற போது, நான் கூட்டிலே கொஞ்சம் தண்ணீரைக் கலந்து விட்டேன். அதை அவர் பார்த்து விட்டு, என்ன இப்படி செய்துவிட்டீர்களே என்று கேட்டார். அதற்கு நான் கூறினேன், நீங்கள் அடுப்பில் வைத்து தண்ணீர் சேர்க்கிறீர்கள், நான் இறக்கி வைத்த பிறகு தண்ணீர் சேர்க்கிறேன் என்றேன். ஆனால் அவரும் விடாமல் நான் நீரை ஊற்றி கொதிக்க வைத்து விடுகிறேன் என்றார். அதற்கு நானோ, எனக்கு இரண்டுமே ஒன்று தான், எனக்கு முக்கியம் வேலை நடக்க வேண்டும் என்பது தான் என்றேன்.

நீங்கள் என்னிடம் 11 மணிக்கு உணவு உண்ண வேண்டும் என்று கூறினால், கொஞ்சம் பொறுத்து உணவு உண்டால் பரவாயில்லையா என்று நான் கேட்கிறேன் என்று வைத்துக் கொள்வோம். அதற்கு நீங்கள், இல்லை உடனே உணவு உண்ணுங்கள், என் வேலை முடிந்து விடும் என்றால், நான் உடனடியாக உணவு உண்ண அமர்ந்து விடுவேன். உங்களை அனுசரித்து நான் நடந்து கொள்வேன்.

தட்டில் என்ன பரிமாறப்படுகிறதோ, அதை உண்ணுங்கள். உங்களுக்கு முன்பு உங்கள் தட்டில் என்ன இடப்படுகிறதோ அதுவே உங்களுக்கு விதிக்கப்பட்டது. அதை நீங்கள் தவிர்க்க முயன்றால் இழப்பு உங்களுக்குத் தான் என்பது இறைவன் விதித்தது. எனக்கு விருப்பமில்லாதவையே கூட என் தட்டிலே இருந்தது என்று சொன்னால், அதிலிருந்து

சிலவற்றை நான் வாயில் போட்டுக் கொள்வேன். அப்படி நான் உண்ணவில்லையென்றால் இரண்டு வகைகளில் பிரச்சனை ஏற்படும். ஒன்று, யார் அதை சமைத்திருக்கிறாரோ அவருடன் பிரச்சனை; இரண்டாவது, உணவே கூட தன் எதிர்ப்பைத் தெரிவிக்கும். அந்த உணவு, நான் என்ன தவறிழைத்தேன், என்னை ஏன் அவமானம் செய்கிறாய் என்று கேட்கும். மேலும், எவ்வளவு தேவையோ, அவ்வளவு மட்டும் எடுத்துக் கொள், ஆனால் என்னை அவமானப்படுத்தாதே என்று கூறும். இதை நான் ஏற்றுக் கொள்ளத்தானே வேண்டும். அதில் நமக்கு ருசி இல்லாமல் இருக்கலாம், அப்படிப்பட்ட ஒரு பொருளை உண்ணக் கொடுத்தாலும்கூட, நாம் அதற்கு மரியாதை அளித்து ஏற்றுக் கொள்ள வேண்டும். அது சுலபமாகத் தயார் செய்யப்படுவதில்லை. அதை விமர்சனம் செய்வதன் வாயிலாக உங்கள் சந்தோஷம் அதிகரிக்கிறதா, குறைகிறதா? பல வேளைகளில் எனக்கு அளிக்கப்படும் உணவு எனக்குப் பிடிக்கவில்லை என்றாலும் கூட நான் அதை ஏற்றுக் கொள்கிறேன்.

எதன் காரணமாக இன்பம் குறைகிறதோ, அதை நாம் செய்யவே கூடாது இல்லையா? எனக்கு விருப்பமில்லாத காய்கறிகள் எனக்கு அளிக்கப்பட்டாலும் நான் அவற்றை உண்டு விடுகிறேன்; அது மட்டுமில்லாமல் பாராட்டவும் செய்கிறேன், இன்று அளிக்கப்பட்ட காய்கறி அருமையாக இருந்தது என்று.

பலமுறை தேநீரில் சர்க்கரை இல்லாதிருக்கலாம், இருந்தாலும் நாம் வாய் திறக்கக் கூடாது. சிலர் கூறுவார்கள், இப்படி நீங்கள் எதையுமே சொல்லாமல் இருந்து விட்டால், உங்கள் மனைவி அசட்டையாக இருக்கத் தொடங்கி விடுவார் என்பார்கள். நாளை என்ன ஆகிறது என்பதைப் பொறுத்திருந்து பாருங்கள் என்றேன் நான். அடுத்த நாளன்று, நேற்று தேநீரில் சர்க்கரையே இல்லை, நீங்கள் ஒருவார்த்தை கூட சொல்லாமல் அருந்தி விட்டீர்கள் என்றார் மனைவி. நான் கூற என்ன

தேவை இருக்கிறது, உனக்கே அது தெரிய வருமில்லையா, நீ குடிக்கவில்லை என்றால் அதை நான் சொல்லலாம் என்றேன்.

**கேள்வியாளர்**: ஆனால் இதன் பொருட்டு ஒவ்வொரு நொடியும் விழிப்போடு இருக்க வேண்டியிருக்கிறதே!

**தாதாஶ்ரீ**: ஒவ்வொரு கணமும், 24 மணி நேரமும் விழிப்போடு இருக்க வேண்டும். அதன் பிறகு தான் இந்த ஞானம் தொடங்கியது. இந்த ஞானம் ஏதோ அப்படியே ஏற்பட்டு விடவில்லை. அதாவது முன்பிருந்தே நான் அனுசரித்து நடக்கத் தொடங்கியிருந்தேன். முடிந்த வரையில் மோதல் போக்கைத் தவிர்த்து வந்தேன்.

ஒருமுறை நான் குளிக்கச் சென்ற போது, நீரை மொண்டு குளிக்கத் தேவையான குடுவை இல்லாததை நான் கவனித்தேன். இந்த நிலைக்கு என்னை நான் அனுசரித்துக் கொள்ளவில்லை என்றால் எப்படி நான் ஞானியாவேன் என்று யோசித்தேன். நீரோ மிகவும் சூடாக இருந்தது. குழாயைத் திருப்பினால் தண்ணீர் வரவில்லை. வேறு வழியில்லாமல் நீரைக் கைகளிலே அள்ளி சூட்டைக் குறைத்து ஒருவழியாக குளித்து முடித்தேன். அனைத்து மகாத்மாக்களும், இன்று “தாதாஜி” குளிக்க அதிக நேரம் எடுத்துக் கொள்கிறார் என்று கூறுவது என் காதுகளில் விழுந்தது. நான் என்ன செய்ய, தண்ணீர் குளிர்ந்தால் தானே குளிக்க முடியும்? யாரிடத்திலும் அதைக் கொண்டு வா, இதைக் கொண்டு வா என்று சிரமப்படுத்துவதை நான் விரும்புவதில்லை, நான் அனுசரித்துச் செல்கிறேன். இந்த உலகத்தில் “ப்ளஸ்-மைனஸ்” என்றவாறு “அட்ஜஸ்ட்” செய்து, அனுசரித்து நடக்க வேண்டியிருக்கிறது. எங்கே குறைவிருக்கிறதோ அங்கே கூடுதலாகவும், எங்கே கூடுதலாக இருக்கிறதோ அங்கே கழித்தும் இட்டு நிரப்ப வேண்டியிருக்கிறது. நான் கூறுவது அர்த்தமே இல்லாதது என்று யாரேனும் கூறினால், அவர் கூறுவது சரிதான் என்று

நான் கூறுவேன். நான் உடனடியாக அனுசரித்து நடந்து கொள்வேன்.

யாரால் அனுசரித்து நடக்க இயலவில்லையோ, அந்த மனிதனை, மனிதன் என்று எவ்வாறு கூறுவது? யார் சூழல்களுக்கு ஏற்ப தன்னை மாற்றி அமைத்துக் கொள்கிறாரோ, அந்த வீட்டில் எந்தப் பிரச்சனையும் ஏற்படுவதில்லை. நானும் ஹீராபாயுடன் அனுசரித்து நடந்து இருந்திருக்கிறேன். மனைவியுடன் இருப்பதன் சந்தோஷத்தை அனுபவிக்க வேண்டுமென்றால், அனுசரித்து நடக்கப் பழகுங்கள். ஆனால் நீங்கள் மனதில் பகைமை சேமித்தீர்கள் என்றால் அதன் விளைவு வேறு. ஏனென்றால் ஒவ்வொரு உயிரும் சுதந்திரமானது, அது தனக்கான சுகம்-சந்தோஷத்தைத் தேடி வந்திருக்கிறது. அது மற்றவர்களுக்கு சுகம்-சந்தோஷத்தை அளிக்க வரவில்லை. இப்போது அதற்கு சுகத்திற்கு பதிலாக துக்கம் கிடைத்தால், மனதில் பழிவாங்கும் எண்ணம் ஏற்படும். அது மகனாக இருந்தாலும் சரி, மனைவியாக இருந்தாலும் சரி.

**கேள்வியாளர்**: சுகத்தைத் தேடி வருபவர்களுக்கு துக்கம் கிடைத்தால், மனதிலே வெறுப்பைக் கொள்வார்களா?

**தாதாஸ்ரீ:** ஆம், சகோதரனாகட்டும்-தந்தையாகட்டும், அவர்கள் வெறுப்பை சேமித்திருப்பார்கள். உலகம் முழுவதும் இப்படிப்பட்டது தான், விரோதத்தன்மையையே தாங்கி உள்ளது. ஸ்வதர்மம், ஆத்மதர்மம் எனும் மோக்ஷப்பாதையிலே யாருடனும் வெறுப்பு இல்லை. எவருடனும் பகைமை இல்லை.

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் சில கொள்கைகள் இருக்கும், இருக்கவும் வேண்டும். இருந்தாலும் சூழல் காரணமாக அவர்கள் நடந்து கொள்ளவும் வேண்டும். யார் ஒருவர் சூழல்களுக்கு ஏற்ப அனுசரித்து நடந்து கொள்கிறாரோ, யாருக்கு இது கைவந்த கலையாகிறதோ, அவர்

கைத்தலத்தில் மோக்ஷம் இருக்கிறது. இது மகத்தானதொரு ஆயுதம்.

இந்த தாதாஜியால் நுணுக்கமான வகையிலே புரிந்து கொள்ளவும் முடியும், சிக்கனமாகவும் இருக்க முடியும், தாராளத்தன்மையோடு நடந்து கொள்ளவும் இயலும். இருந்தாலும், முழுமையாக அனுசரித்து நடக்கவும் செய்வார். மற்றவர்களைப் பொறுத்த மட்டிலே தாராளத்தன்மையும், தன்னைப் பொறுத்த மட்டிலே சிக்கனமாகவும், உபதேசங்களை வழங்குவதிலே நுணுக்கமாக, பிறர் தேவைகளை உணர்ந்து அளிக்க வல்லவராகவும் இருப்பார். ஆகையால் எதிரில் இருப்பவருக்கு நாம் நுணுக்கமான வகையிலே புரிந்துணர்வோடு அணுகுவதாகத் தோன்றுகிறது. நான் சிக்கனமாக இருப்பது அவர்களுக்குப் புலப்படுகிறது, இது உச்சகட்ட நிலைக்குரியது. குடிநீரைக் கூட சிக்கனமாகவே பயன்படுத்துகிறேன். எளிமையான குணமும், இயல்பான தன்மையும் கொண்டவன் தான் நான்

## இல்லையெனில் உலக சிக்கல்கள் ஒரு தடையாகலாம்

உலகியல் தொடர்புகளை நாம் கற்றுக் கொள்ள வேண்டும். இந்த தொடர்புகளை புரிந்து கொள்ளாத காரணத்தால் தான் மக்கள் பலவகையான துயரங்களை அடைகிறார்கள்.

**கேள்வியாளர்**: ஆன்மீகம் தொடர்பான விஷயங்களில் உங்கள் உள்ஞானம் கற்பனைக்கு அப்பாற்பட்டது; அதுமட்டும் அல்லாது, உலகியல் தொடர்புகளை தொடர்பான உங்கள் மொழிகள் மிகவும் இயல்பானவையாகவும் பயனுள்ளவையாகவும் இருக்கின்றன.

**தாதாஸ்ரீ**: உலகியல் தொடர்புகளை புரிந்து கொள்ளாமல் யாருமே மோக்ஷத்தை அடைந்தவர்கள் இல்லை. ஆன்மா பற்றி என்னதான் அறிவு இருந்தாலும், அது உங்களுக்கு உதவாது ஏனென்றால் இந்த உலகம் உங்களை போக விடாது. நீங்கள் சுத்தாத்மா தான், ஆனால் உலகியலை கைவிட்டால் தானே இது சாத்தியம்? நீங்கள் உலகியல் இடைவினைகளில் சிக்கியிருந்தீர்கள் என்று சொன்னால், விடுதலை எப்படி கிடைக்கும்?

போய் ஐஸ்க்ரீம் வாங்கி வா என்று ஒருவரை நீங்கள் அனுப்புகிறீர்கள், அவர் பாதிவழி சென்று திரும்பி வந்து விடுகிறார். ஏன் என்று கேட்டால், வழியிலே கழுதை எதிர்ப்பட்டது, சகுனம் சரியில்லை ஆகையால் திரும்பி விட்டேன் என்கிறார். இப்போது அவரது மனதிலே இருக்கும் இந்த தவறான கருத்தை, மூடநம்பிக்கையை நாம் அகற்ற வேண்டும் தானே! கழுதைக்குள்ளும் இறைவன் வாசம் செய்கிறான் என்ற உணர்வை உண்மையை அவருக்கு நாம் புரிய வைக்க வேண்டும். துரதிர்ஷ்டம் பற்றிய அவரது கருத்தும் நம்பிக்கையும் தவறானவை. கழுதை மீது அவர் கொண்ட வெறுப்பு அதனுள்ளே இருக்கும் இறைவனையே சென்றடைகிறது. அவர் அந்த வகையில் பாவம் செய்தவராகிறார். இதுபோல மீண்டும் நடக்காத வகையிலே அவருக்குப் புரிய வைக்கலாம். இப்படித்தான் அஞ்ஞானம் தழைக்கிறது. மக்கள் அனுசரித்து நடக்கத் தவறுகிறார்கள்.

## தவறானவற்றை சரியாக மாற்றுபவரே சம்கிதி ( நான் சுத்த ஆத்மா என்ற சரியான புரிதலை அடைந்தவர் )

ஒருவர் ஆத்ம ஞானம் அடைந்ததன் அறிகுறி என்ன? வீட்டில் உள்ள அனைவரும் அனுசரித்து நடக்கத் தவறும் போது பிரச்சனை எழுகிறது. யாருக்கு அனுசரித்துச் செல்லும் சரியான அறிவு இருக்கிறதோ அது தான் விடை. ஒவ்வொரு

விஷயத்திலும் அனுசரித்துச் செல்லுதல் தான் சரியான அறிவுக்கு அடையாளம். நான் இந்த உலகை மிக நுணுகி ஆராய்ந்து பார்த்திருக்கிறேன். மிக நுணுக்கமான ஆய்வுக்குப் பிறகு தான் இந்த விஷயங்களை நான் உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன். நடைமுறை வாழ்க்கையில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன்; அதே வேளையில் மோக்ஷப் பாதையில் எவ்வாறு முன்னேறுவது என்பதையும் உங்களுக்குக் காட்டுகிறேன். உங்கள் பிரச்சினைகளையும் தடைகளையும் அகற்றுவதே என் நோக்கம்.

நாம் மற்றவர்களுக்கு ஏற்ப நம்மை சரிப்படுத்தி, அட்ஜஸ்ட் செய்து கொள்ளத்தான் வேண்டும். அப்படி நாம் அனுசரித்துப் போகவில்லை என்றால் தவறு நம்முடையது தான். நம் தவற்றைத் திருத்திக் கொண்டால் மட்டுமே அனுசரித்து நடக்க முடியும். அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுதல் தான் விருப்பு-வெறுப்பற்ற உணர்வு என்பது.

**கேள்வியாளர்**: “தாதாஜி”, அனைத்து இடங்களிலும் அனுசரித்துச் செல்லுதல் என்ற செய்தியை நீங்கள் அளித்திருக்கிறீர்களே, இது அனைத்துச் சூழல்களிலும் பிரச்சினைகளைத் தீர்க்க வல்லதா?

**தாதாஸ்ரீ**: அனைத்துப் பிரச்சினைகளுக்கும் தீர்வு தான் இது. நான் கூறும் ஒவ்வொரு சொல்லும் உங்கள் பிரச்சினைகளுக்குத் தீர்வை அளிக்கும். அவை நிறைவாக மோக்ஷத்தை உங்களுக்கு அளிக்கும். ஆகையால் அனைத்து இடங்களிலும் “அட்ஜஸ்ட்” செய்து கொள்ளுங்கள்.

**கேள்வியாளர்**: இதுவரை நாங்கள் எங்களுக்கு விருப்பமான சூழல்களில், விருப்பமானவர்களோடு மட்டுமே அனுசரித்து நடந்தோம். ஆனால் எங்கே சூழல் சாதகமானதாக இல்லையோ, மனிதர்கள் எதிரிடையாக இருக்கிறார்களோ,

அங்கே கூட அனுசரித்துச் செல்ல வேண்டும் என்று இப்போது எங்களுக்குத் தெரிகிறது, தோன்றுகிறது.

**தாதாஸ்ரீ**: ஆமாம், அனைத்து இடங்களிலும் நீங்கள் அனுசரித்தே செல்ல வேண்டும்.

## தாதாஜியின் அற்புதமான அறிவியல்

**கேள்வியாளர்**: இந்த “அட்ஜஸ்ட்” செய்தல், அதாவது அனுசரித்து நடத்தல் என்ற விஷயம் இருக்கிறதே, இதன் பின்னே இருக்கும் உணர்வு என்ன? எதுவரை நாம் அனுசரித்து நடப்பது?

**தாதாஸ்ரீ**: உணர்வு அமைதியை நோக்கமாக கொண்டது, இலக்கு அமைதி மட்டுமே. அமைதியின்மை, துக்கத்தைத் தவிர்ப்பது, அது ஏற்படாமல் பார்த்துக் கொள்வது. தாதாஜியின் அனுசரித்துச் செல்லுதல் விஞ்ஞானம் இது தான். அற்புதமான விஷயம் இது. எங்கே நீங்கள் அனுசரித்துச் செல்லவில்லையோ, அங்கே அதன் பலனை நீங்கள் அனுபவிக்க நேரிடும். அனுபவித்தும் இருப்பீர்கள், இல்லையா? அனுசரிக்காமல் நடத்தல் என்பது மூடத்தனம். அனுசரித்து நடத்தலே நீதி-நியாயம்.வேண்டுதல்-வேண்டாமை என்பதை யாரும் நீதி என்று கூற மாட்டார்கள். எந்த ஒரு விஷயத்திலும் நாம் பிடிவாதமாக இருக்கக் கூடாது. யார் மீதும் நமது கருத்துக்களை நாம் திணிக்கக் கூடாது. எதன் வாயிலாக பிரச்சனைகள் விரைந்து தீர்வு காணுமோ அதை நாம் கைக்கொள்ள வேண்டும். மாறாக பிரச்சனைகளை வளர்த்துக் கொண்டு செல்லக் கூடாது.

இதுவரை நான் யாரையும் அனுசரித்து நடக்காமல் இருந்ததில்லை. சில வீடுகளிலே ஒருவரோடு ஒருவர் அனுசரித்து நடக்க முடிவதில்லை. இப்படி அனுசரித்துப்போக தெரியுமா-தெரியாதா? இப்படி நடக்க முடியுமா-முடியாதா?

நமக்கு எப்படி வேண்டுமோ அது நமக்கு தெரியும் அல்லவா? இந்த உலகின் விதி என்ன என்றால், உங்கள் பார்வை எப்படி இருக்கிறதோ, அதைப் பொறுத்தே உங்களுக்கு அமையும். அதே போல நீங்கள் கவனிப்பதிலிருந்து தான் உங்களால் கற்றுக் கொள்ளவும் முடியும். இதை யாரும் உங்களுக்குக் கற்றுக் கொடுக்கத் தேவையில்லை. இதில் என்ன கஷ்டம் இருக்கப் போகிறது? ஒருவேளை நான் அளிக்கும் உபதேசம் வேண்டுமானால் புரிந்து கொள்ள உங்களுக்கு கஷ்டமாக இருக்கலாம். ஆனால் நீங்கள் என் நடத்தையை கவனித்தீர்கள் என்று சொன்னால், அதை விரைவாக நீங்கள் கற்றுக் கொள்வீர்கள்.

தங்கள் இல்லங்களிலே அனுசரித்து நடக்க முடியாதவர்கள், ஆன்மஞானம் பற்றிய புத்தகங்களைப் படிக்க ஆரம்பிக்கிறார்கள். முதலில் இதைக் கற்றுக் கொள்ளுங்களேன்! வீட்டில் அனுசரித்து நடத்தல் என்ற அடிப்படையே வராத போது, எப்படி மற்றவை பயனளிக்கும்? இது தான் உலக இயல்பு.

உலகில் உங்களுக்கு அதிகமாக எதுவும் தெரியவில்லை என்றாலும் பாதகமில்லை. தொழில் செய்வதில் தேர்ச்சி அதிகம் இல்லை என்றாலும் பரவாயில்லை. ஆனால் அனுசரித்து நடத்தல் கண்டிப்பாகத் தேவை. அதாவது விஷயம், சூழலுக்கு ஏற்ப அனுசரிக்க வேண்டும், இதைக் கற்க வேண்டும். இந்தக் காலத்தில் அனுசரித்து நடக்கத் தெரியவில்லை என்றால் துயரம் தான் மிஞ்சும். ஆகையால் அனைத்து இடங்களிலும் அனுசரித்து நடக்கப் பழகுங்கள். உங்கள் வாழ்க்கையில் வெற்றியாளர்களாக மாறுங்கள்.

**-ஜெய் சச்சிதானந்தம்**

# ப்ரத்திக்ரமன் விதி

## (மன்னிப்பு கோருதலுக்கான தெய்வீக வழிமுறை)

குறிப்பு : நீங்கள் சுத்தாத்மா, தவறு செய்த சந்தூபாய் (உங்கள் பெயர் அதாவது பைல் ஒன்று) ப்ரத்திக்ரமன் செய்யவேண்டும். நீங்கள் (சுத்தாத்மா), பைல் ஒன்றை (அதாவது மனது, பேச்சு, செயலால் மற்றவர்களுக்கு பாதிப்பு கொடுத்தவர்) ப்ரத்திக்ரமன் செய்ய கூறுங்கள். இது மூன்று பாகம் கொண்ட வழிமுறை.

1. ஆலோச்சனா : ஒருவரின் தவறுகளை மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ளுதல்.
2. ப்ரத்திக்ரமன் : எந்த ஒரு தவறான செயலுக்கு வருந்தி மன்னிப்பு கோருதல்.
3. ப்ரத்யாக்யான் : தவறுகளை மீண்டும் செய்யாமல் இருக்க உள்ளார்ந்த உறுதிமொழி

நம் உள் இருக்கும் தாதாபகவானின் சாட்சியாக, உங்களால் தீங்கு செய்யப்பட்ட (நபரின் பெயர்) அவர்களின் மனது, பேச்சு, உடல், காரணத்தொடர்புடைய கர்மா , நுட்பமான விளைவு கர்மா மற்றும் வெளிப்படும் விளைவு கர்மாவில் இருந்து முழுமையாக பிரிந்து இருக்கும் சுத்தாத்மா பகவானே

1. நான் எனது தவறுகளை ஒப்புக்கொள்கிறேன் (நீங்கள் இந்த நபரிடம் செய்த தவறுகளை நினைவு கூர்ந்து கொள்ளுங்கள்).
2. நான் எனது தவறுகளுக்கு வருந்தி உங்களிடம் மன்னிப்பு கேட்டு கொள்கிறேன்.
3. நான் தவறுகளை மீண்டும் செய்யாமல் இருக்க உறுதியாக தீர்மானம் செய்கிறேன். அன்பார்ந்த தாதாபகவான் அவர்களே, தவறுகளை மீண்டும் செய்யாமல் இருக்க சக்தியை வழங்குங்கள்.

**-ஜெய் சச்சிதானந்தம்**

# நவ கலமோ
## (ஒன்பது ஆழ்ந்த உள்நோக்கம்)
## (தினந்தோறும் மூன்று முறை சொல்லவும்)

(தாதாவிடம் தினந்தோறும் முழு மனதோடு வேண்டி கொள்ள வேண்டும். இதை ஒப்பிக்காமல், உள்ளார்ந்த, கவனத்துடன் பாவிக்க வேண்டும். எல்லாவித சாஸ்திரங்களின் சாரம் இதில் அடங்கிவிடுகிறது.)

1. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியின் தன்னல சுபாவத்தை, சிறிது அளவு கூட துக்கப்படுத்தாமல், துக்கப்படுத்த தூண்டாமல், துக்கப்படுத்துபவதை ஆதரிக்காமல் இருக்க பரம சக்தி வழங்குங்கள்.

யாதொரு ஜீவராசியின் தன்னல சுபாவத்தை சிறிது அளவு கூட, துக்கப்படுத்தாதவாறு, வெவ்வேறு கருத்துக்கள் கொண்ட அனைவராலும் ஏற்றுக் கொள்ளும்படியாக எனது பேச்சு, செயல் மற்றும் எண்ணம் செயல்பட பரம சக்தி வழங்குங்கள்.

2. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு மதத்தின் கருத்தை, சிறிது அளவு கூட துக்கப்படுத்தாமல், துக்கப்படுத்த தூண்டாமல், துக்கப்படுத்துபவரை ஆதரிக்காமல் இருக்க பரம சக்தி வழங்குங்கள்.

யாதொரு மதத்தின் கருத்தை துக்கப்படுத்தாதவாறு, வெவ்வேறு கருத்துக்கள் கொண்ட அனைவராலும் ஏற்றுக்

கொள்ளும்படியாக எனது பேச்சு, செயல் மற்றும் எண்ணம் செயல்பட பரம சக்தி வழங்குங்கள்.

3. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), உடன் வாழும் சொற்பொழிவாளர், சந்நியாசி, சந்நியாசினி, மதத்தலைவர், ஆகியோரை விமர்சிக்காமல், வெறுக்காமல், அவமதிக்காமல் இருக்க எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

4. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியிடமும், சிறிது அளவு கூட வெறுப்பும், விரோதமும், ஏற்படாமல், ஏற்படுத்த தூண்டாமல், ஏற்படுத்துபவரை ஆதரிக்காமல் இருக்க, பரம சக்தி வழங்குங்கள்.

5. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியிடமும், கடுமையான, வேதனைமிக்க பேச்சு பேசாமல், பேச தூண்டாமல், பேசுபவரை ஆதரிக்காமல் இருக்க எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

எவரேனும் கடுமையான, வேதனை மிக்க பேச்சு பேசினால், நான் அவர்களிடம் பணிவாகவும், மிருதுவாகவும் பேச சக்தி வழங்குங்கள்.

6. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசியிடமும், பெண்கள், ஆண்கள், திருநங்கைகள் என எந்த இனத்தினரிடமும், சிறிது அளவு கூட பாலியல் சம்பந்தமான தவறுகள், மோகங்கள், சேஷ்டைகள், பாலுணர்வு

சிந்தனை செய்யாமல், செய்ய தூண்டாமல், செய்பவரை ஆதரிக்காமல் இருக்க பரம சக்தி வழங்குங்கள்.

நிரந்தரமாக புலன் இன்பங்களின்றி இருக்க, எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

7. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு சுவைக்கும் சலனப்படாமல் இருக்க சக்தி வழங்குங்கள். அறுசுவை கொண்ட உணவை சமநிலையுடன் உண்ண பரம சக்தி வழங்குங்கள்.

8. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), யாதொரு ஜீவராசி, காண்பவை, கண் காணாமல் இருப்பவை, உயிருடன் இருப்பவை, மரணம் காணாமல் இருப்பவை, உயிருடன் இருப்பவை, மரணம் அடைந்தவை, என எவரை பற்றியும், சிறிது அளவு கூட விமர்சனம், வெறுப்பு, அவமதிப்பு செய்யாமல், செய்ய தூண்டாமல் செய்பவரை ஆதரிக்காமல் இருக்க எனக்கு பரம சக்தி வழங்குங்கள்.

9. அன்பார்ந்த தாதா பகவான் (நம் உள்ளிருக்கும் சுத்தாத்மா), உலக நலன் பெறுவதற்கு, உறுதுணையாக செயல்பட எனக்கு சக்தி வழங்குங்கள், சக்தி வழங்குங்கள், சக்தி வழங்குங்கள்.

**-ஜெய் சச்சிதானந்தம்**

# Books of Dada Bhagwan Foundation

| | |
|---|---|
| 1.Adjust Everywhere<br>2.Ahimsa : Non-Violence<br>3.Anger<br>4.Aptavani-1<br>5.Aptavani-2<br>6.Aptavani-4<br>7.Aptavani-5<br>8.Aptavani-6<br>9.Aptavani-8<br>10.Aptavani-9<br>11.Autobiography of Gnani Purush A.M Patel<br>12.Avoid Clashes<br>13.Brahmacharya<br>14.Death : Before, During & After<br>15.Flawless Vision<br>16.Generation Gap<br>17.Harmony in Marriage<br>18.Life Without Conflict<br>19.Money<br>20.Noble Use of Money | 21.Pratikraman<br>22.Pure Love<br>23.Right Understanding to Help Others<br>24.Science of Karma<br>25.Science of Speech<br>26.Shree Simandhar Swami : The Living God<br>27.The Essence Of All Religion<br>28.The Fault Is Of The Sufferer<br>29.The Guru and The Disciple<br>30.The Hidden Meaning Of Truth & Untruth<br>31.The Practice Of Humanity<br>32.Trimantra : The mantra that removes all the worldly obstacles<br>33.Whatever Happened is Justice<br>34. Who Am I ?<br>35.Worries |

❖ Dada Bhagwan books are availables in different languages: Gujarati, Hindi, English, Marathi, Telegu, Kanada, Oriya, Malayali, Bengali, Punjabi, Assamese, Tamil, German, Spanish, Russian etc

❖ 'Dadavani' Magazine is published every month in three Languages: Gujarati, Hindi, and English.

**www.dadabhagwan.org**

## Dada Bhagwan Parivar

**Adalaj:** Trimandir, Simandhar City, Ahmedabad-Kalol Highway, Po/Adalaj, Dist.: Gandhinagar-382421, Gujarat, India.
Tel: +91-9328661166/ 9328661177
Email: info@dadabhagwan.org

| | | | |
|---|---|---|---|
| Mumbai | 9323528901 | Delhi | 9810098564 |
| Kolkata | 9830093230 | Chennai | 7200740000 |
| Jaipur | 9351408285 | Patna | 7352723132 |
| Bhopal | 9425024405 | Amravati | 9422915064 |
| Indore | 9039936173 | Bangalore | 9590979099 |
| Raipur | 9329644433 | Hyderabad | 9989877786 |
| Chandigarh | 9780732237 | Pune | 9422660497 |
| Kanpur | 9452525981 | Jalandhar | 9814063043 |
| Bhubaneswar | 8763073111 | Sangli | 9423870798 |
| Varanasi | 9795228541 | | |

| | |
|---|---|
| U.S.A Dada Bhagwan Vignan Institute<br>Tel: +1 877-505-DADA(3232)<br>Email:info@us.dadabhagwan.org | **U.K: Dada Darshan (UK)**<br>Tel: +44 330-111-DADA(3232)<br>Email:info@uk.dadabhagwan.org |
| **Germany** :+49 700 32327474<br>**UAE:** +97 1557316937<br>**Kenya:** +25 4722722063<br>**Dubai**: +971 501364530 | Australia: +61 421127947<br>New Zealand: +6421 0376434<br>Singapore: +65 81129229 |

**www.dadabhagwan.org**



# அட்ஜெஸ்ட் எவ்ரிவேர்

இந்த உலக வாழ்க்கையில் நீங்கள் எதை அறிந்தாலும், அறியாவிட்டாலும், மற்றவரிடம் அனுசரித்துச் செல்வதை கண்டிப்பாக அறிந்திருக்க வேண்டும். எதிரில் இருப்பவர் அனுசரித்துச் செல்லவில்லை என்றாலும், நீங்கள் அனுசரித்துப் போகக் கற்றுக் கொண்டால், எந்த துன்பமும் உங்களுக்கு இருக்காது. அதனால் எல்லா இடங்களிலும் அனுசரித்துச் செல்லுங்கள். ஒவ்வொருவரிடமும் அனுசரித்துச் செல்வதே மிக உயர்ந்த தர்மமாகும். பல வகையான மனித இயல்புகள் இந்தக் காலத்தில் இருப்பதால் நாம் அனுசரிப்பு இல்லாமல் எப்படி வாழ்வது?

இந்த உலகை மிக நுணுக்கமான மற்றும் ஆழமான வகையிலே ஆய்வு செய்திருக்கிறேன். முழுமையாக ஆய்வு செய்த பிறகுதான் இதை உங்களிடம் கூறுகிறேன். நடைமுறையில் எப்படி இருக்க வேண்டும் என்பதையும் நான் தெரிவிக்கிறேன். அதே வேளையில் மோட்சத்தை எப்படி அடைவது என்பதையும் நான் உங்களிடம் பகிர்ந்து கொள்கிறேன். உங்கள் தடங்கல்கள், பிரச்சனைகள், துன்பங்களை குறைப்பதே என் நோக்கமாகும்.

\- தாதா ஸ்ரீ



dadabhagwan.org



ISBN 978-93-90664-98-6

9 789390 664986

Printed in India

Price ₹20